



ஸ்ரீரங்கநாதாயநமஹா.

# ஸ்ரீரங்கமகத்துவம்.



## காப்பு.

### வெண்பா.

திருவரங்கமென்று தியானிக்கிறேய்போம்
கருவரங்கமெய்தாக்கருதும்—பெருவரங்கள்
எல்லாஞ்சித்திக்கு மெனநான்மறையுணரும்
நல்லாரவருப்பர் நயந்து.

## நூல்வரலாறு.



### விருத்தம்.

அந்திநிறத்தெம்பிரான்முன்னளி னாரதனுக்கனுக்கிரகித்த
விந்தைபெறும்ஸ்ரீரங்கமகத்துவமா மிக்கதையைவிளம்பினோரும்
சிந்தையுறப்படித்தோருங்கேட்டோருமவரைந்தோருந்திருமணாளன்
கந்தமலர்ப்பதநிழற்கீழ்வைகுந்தத் தெந்நாளுங்களித்துவாழ்வார்.

### துதிகவி.

அருமறையைக் கவர்ந்துவிரி மகரவாரிதியினிற் சென்றன்றொளித்த, பெருவலிகொள்சோமகாசுரனுமத் தவுணனைமுன் பிறங்குமீனத், திருவுருக்கொண்டறமாய்த்தம் மறையையுலகிடை விரித்துச்சீலர்தம்மை, பொருவிலருளிற் புரந்திவ் வரங்கத்திலறி துயில்செய்புனிதபோற்றி.

# நூல.

## முதலாம் அத்தியாயம்.

சகலபுவன சம்ரட்சகராகியும சர்வசிவதயாபரராகியும் சாளக டன்மூர்த்தியாகியும் - காமதகனராகியும - திரிபுராந்தகராகியும- திரி நேத்திரதாரியாகியும் - மான்மழுவைத் தரித்தமராகியும - மஹேஸ்வ ரிசமேதராகியும - சிருஷ்டி-திதி-சம்மார - திரோபவ- அனுக்கிரக மெனனும் - பஞ்சகிருத்திய கர்த்தாவாகியும - பரப்பிரம்ம சொரூபி யாகியும் விளங்கப்பட்ட ஸ்ரீசதாசிவமூர்த்தியானவர் ஸ்ரீகயிலாசபர் வதத்தில் முப்பத்து முக்கோடி தேவகணங்களும் - நாற்பத்தெண்ணா யிரம ரிஷிகணங்களும நந்திமுதலாகிய அளவில்லாத சிவகணங் களும் பக்தவெண்சித்தர்களெங்களும புடைசூழ்த்தக்கதாக ரத்தினசிம்மா சனத்தில் கொலுவீற்றிருக்கின்ற சமையத்தில.

பராசர்-புண்டரீகர்-அம்பரீஷர்-வீஷ்மர்-தாலப்பியர்- ருக்குமாங் கதர்-பிரகலாதர்- அர்ச்சுனர் - வசிஷ்டர்-மாவெலி-விபீஷணர் - என்று சொல்லப்பட்ட பாகவதசிகாமணிகளுக்குள-சிரோமணியாயிருக்கப் பட்ட-நாரதமகாமுனியானவர் ஒருநாள அத்திவாரமாகட்டநதுசயிலா யத்திற்குப்போய் சாம்பசிவமூர்த்தியைக்கண்டு, பிரதக்ஷிணநமஸ்கா ரஞ்செய்து அஞ்சலியஸ்தராய் நின்றுகொண்டு- ஓ சுவாமீ தேவரீர்- முன்னால அனுக்கிரகஞ்செய்தருளிய புண்ணிய சரித்திரங்களினால சொர்க்கமத்திய-பாதாளமென்னும திரிலோக விஸ்தாரங்களுந்தெ ரிந்து பூலோகத்திலுள்ள புண்ணியஸ்தல மகத்துவங்களும மூர்த்தி மகத்துவங்களும கங்கைமுதலான தீர்த்தமகத்துவங்களும் முனீசு வரர்களுடைய புண்ணியசரித்திரங்களும-அடியேன் கேட்டுகிருதகிரு த்தியனாயினன. (

ஆயினும - தேவரீர் சோழதேசத்தில் காவேரிமத்தியத்துவசத்தைத் திருவாய்மலர்ந்தருளிய காலத்தில பூலோகத்திலுள்ள-சிவஸ்தல ங்களுக்குள - ஸ்ரீரங்கஸ்தலமென்று ஒருதிவ்வியஸ்தலமிருக்கின்றது அந்தஸ்தலமகத்துவம சகஸ்ரபணமுடிகளையுடைய-இரண்டாயிரம நா வையுமுடைய ஆதிசேஷனாலும் - நம்மாலுஞ்சொல்லி முடியாதென் றுதேவரீர் திருவுளம்பற்றியருளிய வசனமாத்திரத்தைச் செவிவழியாக வுணர்ந்து-நானதையடைய வேண்டுமென்று அனேகமுறை தேவரீரையாயி ல் அதிதாகமாயிருக்கின்றது-ஆதலால-அடியேனுக்கு-இன்னமொருதர ம- அந்தஸ்தலமகத்துவமும் - மூர்த்திமகத்துவமும தீர்த்தமகத்து வமும விசதமாய்த்தெரியும்படி அனுக்கிரகஞ்செய்தருளவேண்டு மென்று விண்ணப்பஞ்செய்தார்.

அதுகேட்டுப் பரமேஸ்வரரும்-சந்தோஷசித்தராய் அந்த[illegible] முனிவரைப்பார்த்து ஓய்நாரதமுனிவரே-அந்தத்திவ்வியஸ்தல[illegible] த்தை நம்மால சொல்லிமுடியாதென்று முன்னமேசொல்லி[illegible] தோமே ஆயினும நம்மாலறிந்தமாத்திரஞ் சொல்லுகிறோம [illegible]

ஷமாகச் சொல்லவேண்டுமானால் பதினாயிரந்தேவவருஷங்கள் சேஷ னும உம்மாலுங்கேட்டு முடியாது எம்மாலுஞ்சொல்லிமுடியாது, ஆ தலால் சங்கிரகமாகச் சுருக்கிச்சொல்லுகின்றோம்- நீர்கேட்பீராகவெ ன்று பரமசிவன் திருவுளம்பற்றியருளுகின்றார்- ஓய்நாரதமுனிவரே- சோழதேசத்தில காவேரிமத்தியில் சந்திரபுட்கரணி தீர்த்தத்தில-மகாலட்சுமிகரமாயிருக்கப்பட்ட - ஸ்ரீரங்கஸ்தலமென்கிற ஒருபுண்ணியஸ்தலமுண்டு அந்தஸ்தலத்திற்குப்போனபேர் - நரகத்தைப்பார்க்க வேண்டுவதில்லை எமலோகத்திற்குப்போகவேண்டுவதில்லை- அவர்களை மரணவேதனை வருத்தமாட்டாது மறுபடியும அவர்கட்கு பலவகைப்பட்ட பிறவித்துன்பங்கள் நேரிடாது.

ஆகையினால் பூமண்டலத்தில்புத்திசாலிகளாயிருக்கின்றவர்கள் ஸ்ரீரங்கத்துக்குப் போகாமலும-காவேரிதீர்த்தஸ்நானஞ்செய்யாமலும ஸ்ரீரங்கவிமானத்தைத் தரிசிக்காமலும் ஸ்ரீரங்கநாயகசேவை செய்யாமலும-தங்களாலியன்றமாத்திரம் அதிதிகளாகிய பெரியோர்களுக்குத் தானதருமங்கள் செய்யாமலுமிருக்கமாட்டார்கள்- அதுவுமல்லாமல-தும்முகின்றபோதும் நடக்கும்போதும்- இருமுகின்றபோதும் கொட்டாவிவிடுகிறபோதும்- எச்சிலுமிழுகிறபோதும் - சரீரத்தில ஒருவியாதிநேரிட்டபோதும் பாவிகளோடு சாவகாசஞ்செய்யும்போதும ஒருபொய்வார்த்தைசொல்லுகிறபோதும், பாவிகளோடு சரித்துப்பேசும்போதும் மனோவாக்குகாயமென்னுந் திரிகரணசுத்தியாய ஒருதரம் ரங்காவென்றுத்தியானித்துவசனித்தால அவர்களுக்கு ஒரு அபாயமுண்டாகாது அல்லாமல் இரண்டுதரம் ரங்கா ரங்காவென்று தியானித்தால் அவர்கள முற்பிறவிகளிற் செய்துள்ளபாவங்களெல்லாம சூரியனைக்கண்டபனிபோல நீங்கிப் புண்ணியசாலிகளாவார்கள் -அல்லாமலும் அவர்களைச் சத்தசாகரஞ்சூழ்ந்தவுலகமெல்லாங்கொண்டாடும்.

பின்னரும் ஆயிரம்யோசனைதூரத்திலிருக்கிறவனானாலும் அந்தஸ்தலத்தை நினைப்பானாகில் அர்ச்சமகாபாதகமும அவன் வமிசத்தில இருபத்தொருதலைமுறையிலுள்ள பிதாக்களும் பூர்வஜன்மத்தில செய்துள்ளசகலபாவகன்மங்களு நீங்கிப்போய்வைகுண்டவாசிகளாவார்கள எந்தத்தேசாந்தரத்திலிருக்கின்றவனானாலும் - எந்தத்தீர்த்தத்திலிருக்கின்றவனானாலும் அந்தமகத்துவமாகிய ஸ்ரீரங்கஸ்தலமிருக்கின்ற-திசையைநோக்கி இரண்டுகைகளையுஞ் சிரசின்மேல் அஞ்சலியாகவைத்துக்கும்பிட்டு இரங்காவென்று தியானஞ்செய்வானாகில- அவன்-ஒருகாலத்திலும் பாவத்தையடையமாட்டான-அதுவுமல்லாமல்- சந்திரபுட்கரணி தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து செபதபனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு ஏகமனதாய்நின்று-இரண்டுகைகளையுங்கூப்பிஸ்ரீரங்காவென்று சொல்லிக்கும்பிட்டானாகில - அவன்- ஒருபோதும் பாவத்தையடையமாட்டான்.

இதுவல்லாமல் ஏகாதசிவிரதம் நிச்சயமாயிருந்து- துளசிதீர்த்தஞ்சாப்பிட்டு- அன்றுராத்திரிமுழுதும அந்தப்பகவானுடையகீர்த்தனைகளைப் பாராயணஞ்செய்கின்ற பரமபாகவதர்களின பெருமை..

இவ்வளவென்றளவிட்டு- எவர்களாலுஞ் சொல்லிமுடியாது, அவர்களையே ஸ்ரீமன்நாராயணமூர்த்தியென்றறிந்து அவர்களுக்குச்-சிசுவிடைசெய்து எக்காலமும் வணங்கவேண்டும்.

பிதிர்த்தேவதைகளில் ஒவ்வொருவரும் தங்களுக்குப்புண்ணியலோகப்பிராப்தி யுண்டாக்குவிக்கும்படி, தங்கள வமிசத்தில ஒருசற்புத்திரன் பிறக்கமாட்டானு-அவன்வித்தைதபுத்தியுமீநதவனுகி இரங்கஸ்தலத்திற்குப்போய்-காவேரிஸ்நானஞ்செய்து- இரங்கநாயகியார்சமேதராய்-ஆழ்வார்கள்முதலிய- தாசகூட்டங்கள் புடைசூழ்ந்து சேவிக்கத்தக்கதாக-ஆதிசேஷசயனத்தில் திருக்கண்வளர்ந்தருளுகின்ற இரங்கநாயகனைச்சேவித்து பிறகு- ஒருபிராமணனுக்காகிலும்- அன்னைகொடுக்கமாட்டானு அதற்குசக்தியில்லாவிட்டாலும ஒருகாசாகிலுங் கொடுக்கமாட்டானு- அதுவுநேரிடாவிட்டாலும்-திலதர்ப்பணமாகிலும் பண்ணமாட்டானு-அதுவுங்கூடையாவிட்டாலும்- ஒருபிடிபுல்லாகிலுமபிடுங்கி - ஒருபசுவின வாயிற்கொடுக்க மாட்டானுவென்று நினைத்துத்தபஞ்செய்வார்கள்.

ஓ நாரதரே - இதுவுமல்லாமல் எமபுரத்தில் வாசஞ்செய்கின்ற எமதர்மராஜனானவன்-தன்னுடையதொழில் குறைவுபட்டுதனதிகாரம் அடங்கிப்போய் நரகமடாதாய்க் கிடக்கின்றபடியினுல ஒருநாள அவன்- ஏகாந்தமாயிருந்துகொண்டு பூலோகப்ரவேசத்தை நினைக்கின்றான்.

பூலோகத்திற் பிறந்திருக்கப்பட்ட சகலமனிதர்களும் இரங்கத்துக்குப்போகவேண்டுமென்று நினைத்தமாத்திரத்திலேயே அவர்கள் செய்தபாவங்களெல்லாம் பஞ்சாய்ப்பறந்து போய்நம்முடையலோகத்திற்குவாராமல புண்ணியலோகத்தை யடைகின்றபடியால் இனி நம்முடைய ஆக்கினை எங்கேசெல்லப்போகின்றது நம்முடைய அதிகாரத்தை யாரிடத்திற் செலுத்தப்போகின்றோம தேவர்களேவென்றால் பூலோகத்திற்குப்போய் இரங்கத்தலத்தில் மனிதராகப் பிறக்கவேண்டுமென்று சர்வதாபிரார்த்திக்கின்றார்கள.

புரட்டாசிமாதம் கிருஷ்ணபட்சத்திரியோதசியில் அந்தத்தலத்திற்குப்போய் பிதிர்தர்ப்பணம பண்ணினபலத்தினால் அவனும் அவன்வமிசத்தி லுள்ளவர்களும பாபவிமோசனர்களாய்-பரமபதத்தையடைகின்றார்கள்.

மார்கழிமாசமுழுதும் அங்கக்காவேரியிலும் சந்திரபுட்கரணியிலும் ஸ்நானஞ்செய்து- ஏகமனதாய் நின்று இரங்கநாயகனையும் பரமபாகவதர்களாகிய தாசகூட்டங்களையும் சேவித்தால் அவனும அவன்குலத்திற்பிறந்த பேர்களும் - கிருதகிருத்தியர்களாய் பிறவிக்கடலைநீந்தி மோட்சகரையிற் சேருகின்றார்கள.

ஆடிமாதம் ஆவணிமாதம் புரட்டாசிமாதம் ஐப்பசிமாதம் ஆகிய இந்நான்குமாசங்களும் அந்தத்தலத்திலேயே வாசமாயிருந்து அந்தத்தீர்த்தங்களில ஸ்நானம்பண்ணுவார்களாகில் அவர்களமகத்து

வத்தையின்னபடியென்று எவர்களாலும் அளவுபடுத்திச் சொல்லிமுடியாது-இதற்குவேறாகிய அனேகதிவ்வியத்தலங்களில் சகஸ்த்ரவருஷஞ்சரியாய் வாசம்பண்ணி தவஞ்செய்தவனுக்கு எந்தப்புண்ணியபலமுண்டாகுமோ அந்தப்புண்ணியபலமெல்லாம் இந்தத்திருவரங்கமென்னும் திவ்வியஸ்தலத்தில் ஒருராத்திரி வாசம்பண்ணினவனுக்கு அந்தக்ஷணமே பலிக்கும் அதுவுமல்லாமல் அந்தத்தலத்திலிருந்து ஆயிரங்கோடி மகாபாதகங்களைச் செய்தபோதிலும் அவர்கள் நமதுஎமபுரத்து வாசம்படியை மிதிக்கிறதில்லையென்று வெகுவாய்விசாரமடைந்தான்,

கேட்டீரோ நாரதமுனியே இன்னமொரு அதிசயமுண்டு அதுவுஞ்சொல்லுகின்றோம் - அஃதெப்படியென்றால் எவனாகிலும் இரங்கயாத்திரைபோகிறேனென்று சொல்வானாகில் - அவனைக்கண்டுபிடித்து அவனுக்கு உபசாரமாய்-ஒருவேளை-யன்னங்கொடுத்தால் அப்படிக்கொடுத்தபுண்ணியபுருஷன்- பூலோகத்திலுள்ளவரையில் தனகனகவஸ்துவாகனசம்பத்திற்- குறைவில்லாதவனாய் புத்திரமித்திரகளத்திராதிகளோடு சகலபோகங்களையு மனுபவித்து வெறுத்து முடிவில்பரமபாகவதனாய் திவ்யசரீரத்தைப்பெற்று சூரியமண்டலத்தைப்பேதித்துக்கொண்டுபோய் விரசாநதிக்கு அக்கரையாகிய ஸ்ரீவைகுந்தத்தில் நித்தியாயிசுவரியர்களோடு சதாகாலமு மழிவில்லாத சுகத்தையடைந்திருப்பான் இன்னமும் - அந்தத்தலத்தைச் சேவித்தபேர்களுக்கு - ஒருநாள் தப்பாமல் நாளொன்றுக்கு மூன்றுதரம்பெரியோர்களுக்குப் பாத்திரதானம் பண்ணினவனுக்கு - எந்தப் புண்ணியபலன் சித்திக்குமோ - அந்தப்புண்ணியபலன் சித்திக்கும்.

அந்தத்தலத்திற்சொர்னதானங் கொடுப்பதேவிசேஷம்-இல்லாவிட்டால் அதைபபார்க்கிலும்- பூதானம் கோதானம்-வஸ்திரதானமுதலான மகாதானங்களைப் பிராமணர்களுக்குக் கொடுக்கின்றதுமிகவுமுத்தமம்- அதுவுமல்லாமல்- அந்தமகாதலத்தில் வாசமாயிருந்துபெருமாளுக்குப் பத்தனாயிருக்கின்றவர்கள்கையில் ஒருசொம்புசலங்காவேரி தீர்த்தத்தில்மொண்டுகொடுப்பார்களாகில் மேற்சொல்லியதானங்களைப்பார்க்கிலும்- மகாவிசேஷம் எந்தத்தீர்த்தங்களில் எந்தநதிகளில் முழுகினபோதிலும் காவேரியையும் சந்திர புட்கரணியையும் மனதில்தியானித்து முழுகவேண்டும் மற்றநதிகளைத்தியானஞ் செய்தாலும் தியானஞ்செய்யாவிட்டாலுங் குற்றமில்லை - இந்தக்காவேரியையும்-சந்திரபுட்கரணியையுந் தியானிக்கின்ற புருடன் எந்தக்குலத்திற்பிறந்தவனாயிருந்தபோதிலும் அவனிடத்தில் பெருமாள்- பரமப்பிரீதியாகவிருப்பார்,

இதுவுமல்லாமல்பெருமாள் ஒருகாலத்தில் இந்தமாயாப்பிரபஞ்சசங்காரவாழ்க்கையில்- வலையிலகப்பட்ட-மான்போ லகப்பட்டு நின்றுமோகத்தினால் தடுமாறுகின்ற சீவராசிகளைப்பார்த்து சிலவசனங்கள்சொல்லியிருக்கின்றார்- அஃதென்னவெனில்- நீங்கள் இந்தமாயாசம்பந்தமான சம்சாரபந்தத்தைவிட்டுப் பிறவிக்கடலைநீக்கி மோட்சத்தைச்சேரவேண்டுமானால் நமது- துவாதசநாமங்களையுந்தியானித்து

அஷ்டாக்ஷர மந்திரத்தைச்செபித்து இரங்கத்தலத்திற் காவேரிஸ்நானம் பண்ணுங்கோள் இவைவிட்டாலவெறுஞ்சலத்தையாகிலுமொண்டுபிராமணர்களுக்குக் கொடுங்கோள் அதனாற்புண்ணியசாலிகளாவீர்கள் அதுவுமல்லாமல் - எவனானாலும் இரங்கஸ்தலவாசியாகிய நம்மையும் - சந்திரபுட்கரணியையும காவேரிதீர்த்தத்தையும் - பெற்றதாயையும தகப்பனையும் குருவையும்நிந்திப்பானாகில, அவன் - பிராமணனாயிருந்தபோதிலும நீசனாய்ப்பிறந்து ரௌரவாதிநரகத்தையடைவான் - நீசனாயிருந்தபோதிலும் அவன்நம்மிடத்தில - பத்திவிசுவாசமுள்ளவனாயிருந்து - அஷ்டாட்சரத்தைத்தியானஞ்செய்வானாகில் - அவனே - நமக்கு அதிபக்தனாய் விளங்குவான்.

மகாராஜனேகப்பிறந்து - தருமநீதிகள்தவறிபத்திவிசுவாசமில்லாமல் எகசேரமும்இடைவிடாமல - அஷ்டாட்சர - தியானம்செய்தபோதிலும அவனைநம்கிருத்தாசனாகமாட்டான் - அவனுக்குப் பரமபதங்கிட்டாது அவனுக்கு நரகமேபிராப்தியாகுமென்று திருவுளம்பற்றியருளினார் கேட்டவீராசாரதமுனிவனே பின்னையும நதிகளுக்குள்மேன்மையுடையது காவேரிநதியும விஷ்ணுபத்தருக்குள் சிரேஷ்டமானவர் நீரும் - தேவதைகளுக்குள் - மேலானவர்விஷ்ணுவும் வேதங்களுக்குள் விசிஷ்டமானது - பிரணவமும - எப்படியோ - அப்படியேபோல பூலோகத்திலுள்ள - புண்ணியக்ஷேத்திரங்களில - மகிமைபொருந்தியது இரங்கஸ்தலம் - ஆதலால் - அந்தத்தலத்தில் - விவேகிகளாயிருந்து - வாசஞ்செய்தபேர்களுக்குக் கோகத்தி - சிசுகத்தி - பிரமகத்தி - ஸ்திரீஅத்தி - முதலான சகலதோஷங்களும் நிவாரணமாகும் அல்லாமலும் கள்ளுண்டல் - திருடுதல - அசத்தியமகூறுதல் - கொலைசெய்தல் - பரதாரகமனம்பண்ணுதல என்றுசொல்லப்பட்ட குரூரமாகியபஞ்சமகாபாதகங்களும - பறந்துபோகும் - அவர்கள்வமிசத்தில் - மூவேழு தலைமுறையிலுள்ள பிதிர்க்களும நரகத்தை விட்டு நீங்கிப் புண்ணியலோகத்தைப்பெறுவார்கள்.

ஆகையால் சர்வதா பாவகிருத்தியங்களையேசெய்து அருந்தல் பொருந்தலேபரமாகநினைந்துத் திரிகின்ற பாமரசனங்களைப்பார்த்து ஓய்பாபிஷ்டர்களே - நீங்கள் - ரங்காரங்காவென்று சொல்லுங்கோள் இரங்கயாத்திரை செய்யுங்கோள் - காவேரியில தினமானமபோய் முழுகுங்கோள உங்கள் பாபகர்மங்களெல்லாம் விடுதலையாகுமென்று புத்திசாலியானவன் காருண்ணியமாகச்சொல்லவேண்டும் - அப்படி சொல்லுகின்ற வார்த்தையைச்செவிகொடுத்துத் திருமந்திரம்போல நினைத்துப் பயபத்தி விசுவாசத்துடனே கேட்டபேர்களுக்கு அவர்கள்மனமறிந்து செய்தபாவங்களும் மனமறியாமற்செய்த பாவங்களும் அந்தக்ஷணமே நீங்கி பரமபாகவதராவார்கள்.

அல்லாமலும் நாம் இப்போது உமக்குச்சொன்ன புண்ணியகதையாகிய இரங்கமகத்துவத்தை கிரமமாக எழுதி விஷ்ணுபத்தர்களுக்குக்கொடுத்தவன் ஐசுவரியவானாவதுமன்றி தேகாந்தத்தில் புண்ணியலோகத்தையும்பெறுவான் பிறகு அவன்அந்ததலத்தில் புண்

ணியவாறுடைய வயிற்றிற்பிள்ளையாகப்பிறந்து புத்திசாலியாய் ஸ்ரீரங்கநாயகனைச் சேவித்துக்கொண்டு புண்ணிய புருஷனாயிருப்பான்.

இந்தச்சரித்திரத்தைப் பயபக்திவிசுவாசத்துடன் படித்தபேருக்கும் கேட்டபேருக்குப் வித்தையும் புத்தியும் கீர்த்தியும் ஐஸ்வரியமும் சந்தானசம்பத்தும் திர்க்காயுசும் உண்டாகும் இதுவுமல்லாமல் அமாவாசை நவமி திதி பவர்ணமி திதி துவாதசி அஷ்டமி ஏகாதசி இப்படிப்பட்ட புண்ணிய தினங்களில் இந்தப்புண்ணிய கதையைப் படித்தபேர்களும் விசுவாசமாகக்கேட்டபேர்களும் பூலோகத்திலுள்ள சகலபோகங்களையும் சுகஜீவிகளாயனுபவித்துப் பின்பு தேவர்களாகப்பிறந்து தேவபோகங்களையு மனுபவித்து வெகுத்துமுடிவில் ஸ்ரீவைகுந்தத்தில நித்தியாயிசுவரியர்களாய் ப்ரகாசிப்பார்களென்று பரமசிவன் திருவுளம்பற்றியருள அதுகேட்டு நாரதபகவானும அப்படியாவென்று ஆச்சரியமடைந்து மவுனமாயிருந்தார்.

ஸ்ரீரங்கநாதாயநமஹா.

முதலாவது - அத்தியாயமுற்றும்.





உ

ஸ்ரீரங்கநாதாயநமஹா.

# இரண்டாம் அத்தியாயம்.



துதிகவி.

விருத்தம்.

அலைபெறியும் பாற்கடலின்மத்தாகப் பொன்மலையையமைத்துவா ணக, கலைமதியைத்தாக்கிவாசுகிநாமத்தாவைக்கயிறுப்பூட்டிப், புலவர் குழாங்கடைபொழுதம்மலைகடலிலழுந்தாமற்புகழுமாமை, நிலவுருக் கொண்டருள்புரிந்திவ்வரங்கத்திறகண்வளருநெடியோய்போற்றி.

பிறகுநாரதபகவான் எழுந்து ஸ்ரீகயிலாசபதியாகிய பரமேஸ்வரருக்குச் சாஷ்டாங்க தண்டன்சமர்ப்பித்து இரண்டுகைகளையுஞ்சிரசின்மேல்வைத்துக் கும்பிட்டுநின்று ஓய்சுவாமி திரிபுராந்தகா நிஜரட்சகா-பார்வதிப்பிரேமதா-பரமதயாளாவென்று பலவாகத்தோத்திரஞ்

செய்து தேவரீர் இப்போது அனுக்கிரகஞ்செய்தருளிய புண்ணியசரித்திரத்தைக்கேட்டுச் சந்தோஷசித்தனுனேன் அதிற் சம்சயமில்லை ஆனாலும் இன்னமும் அந்தச்சரித்திரத்தையே கேட்கும்படி ஆசையாயிருக்கின்றது ஆகையால்அந்தத்தலத்தில் ஸ்ரீரங்கவிமானமும் ஸ்ரீரங்க விக்கிரகமும் சந்திரபுஷ்கரணியும் எப்படி யுண்டாச்சுதோ அவ்வ்விர்த்தாந்தத்தை அடியேனுக்கு விகசிதமாகத் திருவுளம்பற்றியருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய பரமசிவன் திருவாய்மலர்ந்தருளுகின்றார்.

எப்படியென்றால் கேட்டீரோ நாரதரே அந்தத்தலத்தினுடைய பெரும் பிரதாபமும் அளவிட்டுச் சொல்லுவோமாகில் பதினாயிரம் தேவவருஷஞ்செல்லுமென்று முன்னமே சொல்லியிருந்தோமே ஆனபோதிலும் நீர்கேட்கவேண்டுமென்கிறஆசையாயிருக்கிறதென்று சொல்லுகின்ற முறைமையினால் இன்னமுமெடுத்துக்கூறுகின்றோம்-நீர்சாவதானமாய்க்கேளும் பூர்வத்தில் நால்வகையோனி எழுவகைத்தோற்றம் எண்பத்துநாலுலட்சம் சீவபேதங்களாயுள்ள சகலசராசரவுயிர்களும் பிரகிருதியி லிருந்துண்டாகி மறுபடியும் அந்தப்பிரகிருதியிற்றானே லயமாகி ஒருரூபமுந் தோற்றாமல் சாடாந்தகாரமாயிருந்தது அப்போது மகாவிஷ்ணுவாகிய பெருமாளொருவர்மாத்திரம் பிரளயகால சமுத்திரத்தில் ஒரு சிறுகுழந்தைபோல் வடபத்திரசயனத்திலிருந்து நெடுங்காலம் பரமயோக நித்திரைசெய்து அதற்குமேல திருக்கண்விழித்துப் பார்த்தருளினார்.

அப்போது எந்தவிடத்திலும் காடாந்தகாரமாய் ஒன்றுந்தோன்றாமலிருந்தது அதைக்கண்டு ஓஓ இதேது ஒரு சீவராசிகளையுங் காணோம் ஒருதேவதைகளையும் காணோமென்று சற்றுநேரம் திருவுளஞ்செய்துபிறகு சகலபுவன சராசரங்களும் சகலலோகங்களும் தம்முடையவயிற்றில்தான் அடங்கியிருக்கின்றதென்று யோகத்திருஷ்டியிலே தெரிந்து சந்தோஷமாயிருந்தார் அந்தசமையத்தில் தேவதேவனாகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தியினுடைய நாபிஸ்தானத்திலிருந்து ஒருதாமரைப்புட்பம் பிரகாசித்துநின்றது அந்தத்தாமரைப்புட்பத்தின் இதழ் ஆயிரத்தெட்டு மாற்றுத்தங்கம்போலும் அதன்கொடி நவரத்தினகசிதம்போலும் அதன்முள்ளுகள் பவளத்துண்டம்போலும் விகசிதமாயிருந்தது அந்தக்கமலத்திலிருந்து சகலலோகங்களையும் சிருஷ்டிக்கப்பட்ட பிரமதேவனுண்டாகி வெளியில்வந்தான் அப்படிவந்த பிரமாவானவன் நாலுதிக்கும் ஏறெடுத்துப்பார்த்தவிடத்தில் வேறொரு பிராணிகளுமில்லாமல் தான்மாத்திரம் ஒண்டியாயிருப்பதால் பயப்பிராந்தியடைந்து பரமித்துக்கொண்டிருந்தான் அந்தவேளையில் மகாவிஷ்ணுவானவர் குருடன் கைக்கோல்போலவும் தரித்திரன் கையிலகப்பட்ட திரவியம்போலவும் தீராப்பிணியாளனெதிர்ப்பட்டசஞ்சீவி பர்வதம்போலவும் ஆகாசமார்க்கமாய் சரேலென்று புறப்பட்டு ஒரு அம்சபக்ஷியாக ஆதித்தமண்டலம்போலும் மகமேருபர்வதம்

போலும் பிரகாசித்துக்கொண்டு நானாவிசித்ரரூபமாய் காகாவென்னுஞ்சத்தத்துடன் தொனித்துக்கொண்டு அந்தப்பிரமதேவனுக்குமுன்னேவந்துநின்றார்.

அதுகண்டு பிரமதேவனும் ஆச்சரியமடைந்து அந்த அம்சரூபியைப்பார்த்து நீர்யாரென்றுகேட்க அந்தவார்த்தைக்குப்பதில் அம்சரூபியும் தோம்காவென்று சொல்லியருள அன்றுமுதல் தகப்பனானவன் பிள்ளைக்குப்பேரிட்டதுபோல் பிரமனுக்குத் தோம்காவென்று பேருண்டாச்சுது பிறகு அந்த அம்சரூபியான பெருமாள் பிரமதேவனைப்பார்த்து நாம் ஹரியென்று திருவுளம்பற்றியருளினார் அதுகேட்டவுடன் பிரமதேவன் சகலபயங்களுநீங்கிச் சந்தோஷசித்தனாய் அந்தமூர்த்திக்குச் சாஷ்டாங்க தண்டன்சமர்ப்பித்து சுவாமீ தேவரீர் எனக்கு என்னபுத்தி கட்டளையிடுகிறீர் இனி நான் செய்யவேண்டிய காரியமென்ன அதைத்திருவுளம் பற்றியருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய அதுகேட்டு விஷ்ணுவாகிய அம்சரூபியும் சந்தோஷமாய் அந்தப் பிரமதேவனைச் சமீபத்திலழைத்து மகா அன்புடனே பிரணவமந்திரமென்கிற ஏகாட்சரத்தை மாத்திரம் உபதேசம் பண்ணி நீ இந்த மந்திரத்தைமாத்திரம் செபஞ்செய்துக்கொண்டிருமென்று கட்டளையிட்டு அந்தரமார்க்கமாய் மறைந்து போய்விட்டார்.

அப்பால் பிரமதேவனும் அந்தப்பிரணவமந்திராட்சரத்தை அரியென்னும் அட்சரத்தோடுசேர்த்து மூன்றட்சரமாக்கி இடைவிடாமல் செபஞ்செய்யத்தொடங்கினான் இப்போதும வேதாத்தியயனஞ்செய்கின்றவர்கள் பிரமத்தில் அந்த மூன்றட்சரத்தையும் உச்சரித்து அப்பால் சாங்கமாக வேதாத்தியயனஞ் செய்கின்றார்கள் அப்படி பிரதமத்திலுச்சரித்து பிறகு வேதாத்தியயனஞ்செய்தால் அதிலே என்ன அபசாரம்நேரிட்டபோதிலும் தோஷமில்லை மேலும் இப்போதும ஒருவன் கிழக்குமுகமாய் நின்று அரீ அரீ யென்று சொன்னாலவன்செய்த சகலதோஷங்களும் நிர்த்தோஷமாகும் அவனை எந்த பாதகங்களுமணுகாது.

கேட்டீரோ நாரதரே அப்பால் பிரமதேவனும்தாமரைப்புஷ்பத்தின்மேலிருந்துதாரகமாகியமூன்றட்சரத்தையும்செபித்துக்கொண்டு ஆயிரம்வருஷகாலந் தபசுபண்ணி அந்தமோமகிமையினால் காயத்திரிமந்திரங்களையுண்டாக்கினான் அதன்மகிமையினால் முதலயாகத்தில் அவன்முகத்திலிருந்து பூலோகமும் அக்கினியேத்திரகர்மமும் எருவேதமும் யாகத்துக்குவேண்டிய ஒன்பதுமந்திரங்களுமதேவதைகளில் அக்கினிதேவனும காயத்திரிசெபங்களும் மனிதர்களில் பிராமணர்களும் நாலுகால்மிருகங்களில் வெள்ளாடுகளுமுண்டாயின அப்பால் இரண்டாவதுயாகத்தில் அவன்கைகளிலிருந்துதேவலோகமும சாமவேதமும் அசுரர்களும் எக்கியத்துக்குச் சாதகமானபஞ்சாட்சரங்கள்கூடிய மந்திரங்களும் தேவதைகளில் இந்திரனுடமனிதர்களிலும

ன் அவனே புண்ணியவான் அவனே யோக்கியமான பரமமுக்தன் அவனே பரமஞானி அப்படியில்லாமல் பிராமணகுலத்திற் பிறந்து நான்குவேதங்களை முணர்ந்தும் வைதருமமாகாநிருத்துக்கள் முதலான சற்கருமங்களைக் குறைவில்லாமல் நடத்துகின்றவனாலும் என்னிடத்தில் பக்தியில்லாதவனால அவனே நீசனாவான்.

ஓப்பிரமாவே நீ என்னிடத்திற சதுர் வேதங்கள உபநிடதங்கள் அர்த்தசாஸ்திரங்கள சிற்பசாஸ்திரங்கள் சோதிடசாஸ்திரங்கள இது முதலான சகலசாஸ்திரங்களுந் தெரிந்துகொண்டாய் ஆகையால் இனிய கின்னரகிம்புருட கந்தர்வ யாத்திய வித்தியாதரர்களானசகலதேவதைகளையும் மனிதர்களையும சீவராசிகளையும் சொர்க்கநரகங்களையு ம் அவரவர்களுக்குத்தக்கந்த லோகங்களையும் போகங்களையும உண்டாக்கி அவரவர்கள தாரதம்மியத்திற்குத் தக்கந்தவர்ணாச்சிரமதர்மங்களையும நடப்பித்தருளென்று பிரமதேவனுக்கட்டளையிட்டருளி ஸ்ரீமன் நாராயணமூர்த்தி கருடவாகனரூடராய் வைகுந்தத்திற்கு எழுந்தருளினாரென்று பரமசிவன் திருவாய்மலர்ந்தருள அதுகேட்டு நாரதபகவானும் பாக்கியமபாக்கியமென்று பரமசிவனுக்கு நமஸ்காரஞ்செய்து ஆனந்தபரவசப்பட்டிருந்தார்.

இரண்டாவது - அத்தியாயம்.

முற்றிறது.





உ

ஸ்ரீரங்கநாதாயநமஹா.

# மூன்றாம் அத்தியாயம்.



துதிகவி.

விருத்தம்.

புவியைத்தனைப்பாயலாச் சுருட்டிப்போய்ப் பாதாலத்திற்புகுந்தபொற்கண், அவுணனுயிர்குடித்திமைப்பி னப்புவியைமுன்போ லுண்டாக்குமாறு, நவமுறுமொண்பிறைக் கோட்டுப்பன்றியுருக் கொண்டருளினார்போற்றப், பவமகற்றுமரங்கத்துறை பாம்பணைமேற் றுயில்கூருமயரமபோற்றி.

அப்பால் நாரதபகவான் எழுந்துநின்று ஸ்ரீகைலாசபதியாகிய பரமசிவனுக்குப் பிரதட்சண நமஸ்காரஞ்செய்து சுவாமி பிறகு அந்தப்பிரமதேவன் சிருஷ்டிபண்ணின க்ரமங்களையும் அவனுக்கு ஸ்ரீமகாவிஷ்ணு செய்த வனுகூலங்களையும் விவரமாய்த்திருவுளம்பற்றியருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய அதுகேட்டுப் பரமசிவமூர்த்தியுஞ் சந்தோஷமடைந்து நாரதனைப்பார்த்து நீரோ இவ்வளவு அபேட்சையாய்க் கேட்கின்றபடியால் நாமசொல்லுகிறோம நீர் சாவகாசமாய்க்கேளும் எப்படியென்றால் அந்தப்பிரமதேவன்போய் பெருமாள் கட்டளையிட்டபடியே அனேககாலம் தபசுசெய்துக்கொண்டிருந்தார் பிறகு சகலபுவனங்களையும் சிருஷ்டிசெய்து சோதிடநூலைப் பார்த்தவிடத்தில் தேவேந்திரனுடைய ஆயுசும் அதிகாரமும போகபோக்கியங்களும் சிறிதுநாளிலநசித்துப்போகுமென்றறிந்து இன்னம் மற்றுமுள்ள யக்ஷகின்னரகிம்புருட சித்தவித்தியாதரகணங்களுடைய ஆயுசும்ஐசுவரியமும மனுஷர்களுடைய அற்பாயசும்போகபாக்கியமும் தமமுடையகாலவுள்ளவும், இமமட்டென்றறிந்துகொண்டுநாம்இதுகளையெல்லாம் பகவானால் க்ரமமாகத்தெரிந்துக்கொள்ளவேண்டுமென்னுமுறுதி கொண்டு அதிதாகமாய் திருப்பாற்கடலுக்குச் சமீபத்திறபோய்நின்று வெகுகாலந்தவசுசெய்தான்.

கேட்டீரோ நாரதமுனியே அப்படி நெடுங்காலந் தபசுபண்ணின பிரமதேவனுடைய தவசுக்குத் திருவுளமிரங்கி மகாவிஷ்ணுவானவர் கூர்மாவதாரங்கொண்டெழுந்தருளி வந்து பிரமதேவனுக்குத் தரிசனங்கொடுத்தருளினார் அப்படி கூர்பரூபியாய் வந்தபகவானுக்குப் பிரமதேவன் அனேகவந்தனவழிபாடுகளசெய்து சுவாமீ தேவரீர் அடியேனிமித்தமா யெழுந்தருளிவந்துதரிசனங்கொடுத்தருளியது உண்மையாகுமானால உமமுடையயதார்த்த சொரூபத்தைப் பிரத்தியட்சமாகக் காண்பித்தருளவேண்டும அடியேன் இதுவரையிலுந் தேவரீருடைய நிசசொரூபத்தைக்கண்டு தரிசனஞ் செய்ததில்லை இப்போதாகிலும் உமது நிசசொரூபத்தைககாண்பித்தருளவேணுடு துவாதசநாமஙகளையுங்கொண்டாடித்துதித்தான் அதுகண்டு கூர்மரூபியாகிய ஸ்ரீமன்நாராயணமூர்த்தியும் பிரமதேவனைப்பார்த்து வாரும்பிள்ளாய் பிரமாவே உன்னைப்போலொத்த பிரமாக்கள் அனேகப்பேர்வந்தாலும்என்னுடையநிசரூபத்தைக் கண்டுபிடிக்க மாட்டார்கள் நான் நினைத்தமாத்திரத்தில் அனந்தமாயிரம் பிரம்மாண்டங்களையும் அனந்தமபிரம்பிரமாககளையும் பிறப்பிக்கவும் இறப்பிக்கவுமகூடும்.

ஆனபோதிலும் என்னுடைய பக்தஜனங்களாயிருக்கிற பேர்கள் எனது நிசச்சொரூபதரைக்காணவேண்டுமென்று நினைத்த அந்தக்கணமே அவர்களென்று நிசச்சொரூபத்தைக்கண்டு தரிசிப்பார்கள்மற்றபேர்கள எப்படிபபட்ட வல்லவர்களாலும் அவர்களால் என்னைக்கண்டு தரிசிக்கமுடியாது பக்தசெனங்களை ரட்சிக்குநிமித்தம் அனேகம் அவதாரங்களெடுப்பேன் அல்லாமலும் மச்சமானது பார்வையினாலும் கூர்மமானது தியானத்தினாலும் அசசமானது ஆலிங்கனத்தினாலும் [illegible]ஆனது தன்சிசுக்களை அதனதனுருப்படுத்தி வர்த்திக்கச்செய்கிறது

போல நாம் உன்னை புறப்படுத்தி வர்த்திக்கச்செய்யு நிமித்தம் மேற்சொல்லிய மூன்று ரூபங்களிலும் உனக்குத்தரிசனங் கொடுத்து பிரணவமந்திராட்சரங்களையும உபதேசஞ் செய்து நீசெய்த யாகங்களினாலே ருக்கு யசுர்சாம அதர்வணமென்னுஞ் சதுர்வேதங்களையும் உண்டாக்கிக்கொடுத்து உனக்குப் பிரமஞானம ஐயந்திரிவில்லாமல் பிரகாசிக்கும்படி அசலரூபமும் மனுஷசரீரமுமாய் வந்துபிரத்தியக்ஷமாகினேன் இப்படிப்பட்ட மகிமை யெல்லாங் காண்பித்தும் உனக்கு என்னுடைய நிசசொரூபம் கரதலாமலகமாய் பிரகாசிக்காதபடியினால் முன்னமே நான் உனக்குபதேசித்து வைத்தபிரணவமந்திரத்தை அஷ்டாட்சரத்துடன் கூட்டிச் செபஞ்செய்துக்கொண்டிரு அப்படிசெய்வாயாகில் உனக்குச்சகல வல்லபங்களுமுண்டாகும் சகலவேதார்த்த ரகசியங்களும் சகலமந்திரார்த்த ரகசியங்களும் வெளிப்படும் இக்கமந்திரமே மூலமந்திரமென்று சொல்லப்படும் இந்த மந்திரத்தைச் சதாகால ப்ரீதியுடன் செபித்துக்கொண்டிருக்கிற பரமபாகவதர்கள் எப்போதும் என்னைவிட்டுப்பிரியாமல் சகலசம பிரமத்துடனே வைகுந்தத்தில் நித்திய திருப்தியுடையவர்களாய் வாழ்ந்திருப்பார்கள் பூலோகத்தி லிருக்கின்றபோதும் அவர்கள் சகல போகபாக்கியங்களிலும புத்திரமித்திர சம்பத்துகளிலும் குறை வில்லாதவர்களாகவே யிருப்பார்கள் ஆகையினால் நீயும் அஷ்டாட்சரத்தை இடையுறாமல் உச்சரித்துக்கொண்டிருவென்று கட்டளையிட்டுபகவானும ஸ்ரீவைகுந்தத்திற்குப்போய்விட்டார்.

கேட்டீரோ நாரதரே அப்பால் பிரமதேவனும் பகவானுடைய வாக்கியத்தைச சிரசாவகித்து அஷ்டாட்சர செபம்பண்ணிக்கொண்டுமறுபடியும் ஆயிரம்வருஷந் தபசுபண்ணினான் அப்படிதபஞ்செய்த பிரமாவினுடைய தபசுக்குத்திருவுளமிரங்கி ஆதிசேஷசயனராகிய ஸ்ரீ மன்னாராயணமூர்த்தி கடாட்சித்தபடியால் திருப்பாற்கடல மத்தியிலிருந்து ஒருதிவ்யவிமானம் ககத்தகாயமாய் சகஸ்ரகோடி சூரியப் பிரகாசம்போல் பிரகாசித்துக் கொண்டு அந்தமார்க்கமா யெழுந்தருளிவந்தது அதுதெரிந்து பிரமதேவனும தபசுநிலைவிட்டெழுந்துநின்று இந்தவிமானம் வருகிற வைபவத்தைக்கண்டு அதிசயமடைந்து மகாபயபக்தியுடனே ஸ்தோத்திர நமஸ்காரங்கள் செய்து அந்தவிமானத்தை உற்றுப்பார்க்குமளவில் அதில்ஸ்ரீவைகுண்டவாசிகளாயிருக்கிற அனந்தருமசனகாதயோகீஷ்வரர்களும இன்னமும் சத்தியலோகவாசிகளாயிருக்கிற சகலதேவகூட்டங்களும யக்ஷகின்னர கிம்புருடகருடகாந்தர்வ சித்தவித்தியாதர கூட்டங்களும் சகலரிஷிகூட்டங்களும பிரகாசித்திருந்தார்கள் ஓய்நாரதமுனிவரே அதில் நீருமிருந்தீர்.

அப்படிப்பட்ட ஸ்ரீரங்கவிமானத்தை வேதசொரூபியாகிய கருடாழ்வார் முதுகில் தாங்கிக்கொண்டு ஆதிசேஷன் முத்துச் சாமரங்களாலலங்கரித்த வெண்பட்டுக்குடை கவித்துக்கொண்டுவர விஷ்வக்சே

னர்பொற்பிரம்பினுல் சந்தடிவிலக்கிக்கட்டியங்கூறிவர சந்திரசூரியர்களி ருவரும் வெண்சாமரைவீசிவர வைநாரதரொரும் தும்புருவரும் கந்தர் வர்களும் அரிகீர்த்தனைகள்பாடிவர இன்னமுமற்றுமுண்டான தேவரிஷி களனைவரும் அஞ்சலியஸ்தர்களாய் நின்று சகஸ்ரநாமங்களையும் புக ழ்ந்துவரதேவேந்திரனும் தேவர்களும் புஷ்பமாரிபொழிந்துவர ஸ்ரீ அ கிலாண்டகோடி பிரமாண்டநாயகராயும் ஆதிமத்தியந்தரகிதராயும் ஆப த்பாந்தகராயும் விளங்கப்பட்ட ஸ்ரீரங்கதாமர்வந்தார்வநதாரென்று திரு ச்சின்னங்களூதிவர பதினெட்டுவகை மேளவாத்தியங்களும் தேவதுந் துமியும் அண்டகடாகங்களெல்லாஞ் செவிடுபடும்படி தாம்தாமென்று முழங்கிக் கொண்டுவர இவ்வகைப்பட்ட சம்பிரமங்களுடனே ஜெயம் ஜெயமென்று பூமியிற்கொண்டுவந்திறங்கினர்.

அதுகண்டு பிரமதேவனும் அடியறந்த மரம்போற் பூமியில்விழுந் துசாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து அவனுடையநாலுமுகங்களாலும் நா லுவேதங்களையும பாராயணஞ்செய்துக்கொண்டு ஆனந்தபரவசனாய் நி ன்றான் அப்போது அந்த விமானத்துடனேவந்த கட்டியக்காரர்களாகிய பொற்பிரம்புக்காரர்களில் சிரேஷ்டரான சுனந்தரானவர் பிரமதேவனைப் பார்த்து வாரும் பிரமதேவரே நீர்செய்த தபோமகிமையினுல் ஸ்ரீமந் நாராயணருடைய கிருபாகடாட்சத்தினுல் வேதசாரமாகிய மூன்றெழுத் தோருருவாகப்பிரகாசிக்கின்ற பிரணவமந்திரமே இந்தவிமானமா கவும் அந்தமந்திரார்த்தமாய் விளங்குகின்ற பராபரவஸ்துவே ஸ்ரீரங்க நாயகராகவும் தோற்றப்பட்டன உம்முடைய தயவினுல் பூலோகத்திலு ள்ள அரிபக்தர்களனைவரும் இந்தவிமானத்தைச் சேவித்துக் கரையே றுவார்கள்-அதற்குச் சந்தேகமில்லை-இதோ அந்தவிமானத்து மத்தியில் பிரணவசொரூபியா யிருக்கின்ற ஹரிசர்ப்பசயனத்தில் மகாலக்ஷுமியுடனே டன் பக்தசனங்களை ரட்சிக்கும்பொருட்டு யோகநித்திரை சாதிக்கின்றார் ஆதலால் உம்மைப்போல பக்தியுடையபேர்கள் இந்த விமானத்தையே சேவிகக வேண்டும், ஏனென்றால,

பூர்வத்தில் உம்மைப்போலொத்த சதுர்முகப் பிரமாக்கள் அனேக ங்கோடிபேர் அனேகமாயிர வருஷகாலம் தவசுபண்ணி இந்த விமானத் தையும் இந்தவிமானபதியாகிய ஸ்ரீரங்கநாயகரையும் சேவித்துபூசித்து அந்தபூஜாபலத்தினுல் அனேககாலம் பிரமபட்டமனுபவித்தார்கள் இந் திரன்-அக்கினி-இயமன்- நிருதி-வருணன் - வாயு- குபேரன் - ஈசானி யனென்று சொல்லப்பட்ட அஷ்டதிக்குப் பாலகர்களும் இப்படியேசே வித்து திசாநாதராகினர்கள் ஆதலால் நீரும் இந்தவிமானத்தைச்சேவி த்துப் பூசிப்பீராகில் உமக்குச் சர்வ அதிகாரமு முண்டாகுமென்று சொன்னார் அந்த வசனாமிர்தங்களைக் கேட்டு பிரமதேவனும் அப்படியா மென்று பயபக்தி விஸ்வாசத்துடன் அந்தவிமானத்தி னுட்புகுந்து தரி சிக்குமளவில் முன்னர் இந்தப்பிரமதேவனுல் சிருஷ்டி பண்ணப்பட்ட சகலபுவனங்களும சகலசராசரங்களும காணப்பட்டன-அல்லாமலும்

கவி.

எண்ணூறுகோடி யுகம்பார்த்திருக்கினும்
கண்ணைபிரானைக் கண்டறிவாயிலை
உண்ணுடிச்சற்றே யொளிபெறநோக்கிடில்
கண்ணைப்பிரானைக் கண்டுய்யலாகுமே

என்று முன்னோர் கூறியிருக்கின்ற நியாயம்போல அந்தவிமானத்தினுள் மேலே ஆகாசமும் கீழே பூமியும் மத்தியில் மகாலட்சுமி சமேதராய் ஆதிசேஷசயனத்தில் பகவான் பள்ளிகொண்டிருக்குந்தாவமும் அந்த வாசற்படியி னிருபுறத்திலும் ஜெயவிஜையாளென்கிற துவாரபாலகர்களும் பெருமாள் கிரீடபாரிசத்தில் கணபதியும பாதபாரிசத்தில் துர்க்கையும சிரசுக்கும் பாதத்துக்குமத்தியில் சரஸ்வதியும் காயத்திரியுமாகத் தோற்றப்பட்டன-அல்லாமலும் அந்தவிமானத்து உச்சியில் நாலுவேதங்களோ நாலுகலசமாகவும் பிரணவமுதலிய மகாமந்திரங்களே சிகரமாகவும் விளங்கின-அதுவுமல்லாமல் பாதத்தில்எக்கியங்களும் நெற்றியில் எக்கியமந்திரங்களும் வயிற்றில அசுவினிகளும் அந்தராளத்தில்மருத்துக்களும் அஷ்டவசுக்களும் ஏகாதசருத்திரர்களும் துவாதசாதித்தர்களும் நவக்கிரகங்களும் இருபத்தேழு நட்சத்திரங்களும் சப்தரிஷிகளும் அஷ்டதிக்குபாலகர்களும் சகலதேவர்களும் காணப்பட்டன-இப்படி காணப்பட்டசகலவைபவங்களையும்பார்த்து ஆச்சரியப்பட்டு பிரமதேவனானவன் அந்தபகவானுக்குச்சர்வோபசார பூசைகளும் நடப்பித்து பிரதக்ஷிணநமஸ்காரஞ்செய்து மகாபயபக்தியுடனே அந்தப்பெருமாளுடையதிருவுருவத்தைத் தியானித்துப்பார்க்குமளவில்,

இந்திர நீலம்போற் பிரகாசிக்கின்ற மேனிவர்ணமும் பூரணசந்திரபிம்பம்போற் பிரகாசிக்கின்றதிருமுகத்தாமரையும், மூன்றும் பிறைபோல்விளங்கப்பட்ட நெற்றியும் பஞ்சாயுதங்கள் தாங்கப்பட்ட கைத்தாமரைகளும், ஸ்ரீலட்சுமிவசிக்கின்ற தோள்களும், கிருபையேவடிவமாய் விளங்குகின்ற திருக்கண்தாமரைகளும், அவற்றினுள மதுபானங்குடித்து மயங்கிக்கிடக்கின்ற வண்டுகளைபோன்ற கருவிழிகளும், கோதண்டத்திற்குச் சமானமாய் வளர்ந்திருக்கின்ற புருவங்களும் கொவ்வைக்கனிபோலும் பவளம்போலும் சிவந்தவாய்த்தாமரையும், எள்ளின்புஷ்பத்தையொத்த நாசிகளும், திரிலோகங்களும் பிரமைகொள்ளத்தக்க புன்சிரிப்பும், வலம்புரிச்சங்கு போன்றகழுத்தும், மகாலட்சுமிவாசமாயிருக்கின்ற மார்பும், சகலசராசரங்களையும் அடக்கிவைத்திருக்கின்ற திருவயிறும் கங்காவர்த்தனஞ்சுழித்திருக்கின்ற சுழல்போன்றநாபித்தாமரையும், வாழைத்தண்டை யொத்ததுடைகளும், மன்மதபாணம்போன்ற [illegible]ணைமுழமும், செங்கரும்புபோன்றகணைக்கால்களும்; சந்திரரேகை வச்சிரரேகை பதுமரேகை அங்குசரேகை கவுசிகரேகைகளுடன் சிவந்திருக்கப்பட்ட பாததாமரைகளும், நவரத்தினகசிதமாய் கோடி சூரியரொளிபோற் பிரகாசிக்கின்ற கிரீடமும், மகரகுண்டலங்களும், வனமாலைமுதலிய சுகந்தபரிமள புஷ்பமாலைகளும் கவுஸ்துவாபரணமுதலிய நா

விசித்திராபரணங்களும், விஜேதாடவித முப்பீதாம்பரமும் பிரகாசிக்கும்படி மகாவைபவத்துடன் ஒருகையைச் சிரசின்கீழ் வைத்துக்கொண்டு மற்றொருகையைத் திருமேனிமேல்நீட்டிக்கொண்டு ஆயிரபணாமுடிகளையுடைய ஆதிசேஷன்பேரில் யோகநித்திரை செய்துக்கொண்டிருந்தார்.

அப்படி விளங்குகின்ற ஸ்ரீரங்கநாதருடைய திருவழகைத்தோத்திரஞ்செய்து சுவாமீ தாசனைரக்ஷித்தருளவேண்டும் ரக்ஷித்தருளவேண்டுமென்று நமஸ்காரஞ்செய்து ஸ்ரீரங்கநாதாயநமஹா- ரங்கநாதாயநமஹாவென்று பலவாறுகத்தவுத்தியஞ்செய்தான்-கேட்டீரோ நாரதரேயென்று பரமசிவன் திருவுளம்பற்றி யருளினர், அதுகேட்டு நாரதமுனிவரும் ஆச்சரியப்பட்டு மகாசந்தோஷத்தை யடைந்திருந்தார்.

ஸ்ரீரங்கநாதாயநமஹா.

மூன்றாவது அத்தியாய முற்றிற்று.



☞ இரண்டாமத்தியாயத்தில் கூர்மாவதாரத்துதிகவியில் - கலைமாமலையைத்தாக்கி என்பதனை - கலைமதியைத்தூணாக்கி - என்று கூட்டிக்கொள்க.



உ

ஸ்ரீரங்கநாதாயநமஹா.

# நான்காம்-அத்தியாயம்.





சுரர்முதலோரேத்தெடுப்பக்கம்பூணரி நரசிங்கச்சொரூபமாகி, இரணியன்வல்லுயிர் குடித்துஹரிநமோநமோ வென்றுள் ளிரங்கிநிற்கும், ஒருமதலைபிரகலாதனனையளித்தருளுவாயுலகமுய்யத், திருவரங்கத்தரவணைமேற்றிருக்கண்வளர்ந்தெமையருளுந்தேவேபோற்றி.

அப்பால் நாரதமகாமுனியானவர் ஸ்ரீகயிலாசபதியாகிய சாம்பசிவமூர்த்திக்குத் தண்டனிட்டு சுவாமீ அதற்குமேல் பிரமதேவர் நடத்த வர்த்தமானமும் அடியேனுக்குச்சொல்லி யருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய பரமசிவன் திருவுளம்பற்றி யருளுகின்றார், கேட்டீரோ நாரதரே நீர் இவ்வளவாசையாய்க் கேட்கிறபடியால் அந்தரகசியத்

தையுஞ் சொல்லுகிறோம் அஃதெப்படியென்றால் - பிரமதேவர் ஆர்த்தங்கவிமானத்தில் பள்ளிகொண்டிருக்கிற ஸ்ரீரங்கநாதனைப்பார்த்து ஸ்ரீதரா ஸ்ரீநிவாசா தமோதரா சர்ப்பசயனா லக்ஷ்மி சமேதா ரங்கநாயகா சுவாமீ ஆயிரஞ்சிரசுகளும் ஆயிரங்கண்களும் ஆயிரங்கைகளும் ஆயிரந்திருநாமங்களு முடையவராய் ஆயிரங்கோடி பிரம்மாண்டங்களிலும் வாசமாயிருக்கிற உம்முடைய பாதங்களையே நான்சதாகாலமும் பூசை செய்யவேண்டும் தேவரீரைக்குறித்தே ஆயிரம் யாகங்கள் பண்ணவேண்டும் பக்தஜனங்களை ரட்சிக்கின்ற திருப்பாதங்களுக்கு நமோ நமோவென்று ஆயிரந்தரம் சாஷ்டாங்கமாய் விழுந்து சேவிக்கத் தொடங்கினான்.

கேட்டீரோ நாரதரே ஒருதரஞ்சேவித்தால் வந்தனம் இரண்டுதரஞ் சேவித்தால் பிரணாமம், மூன்றுதரஞ்சேவித்தால் தண்டம், நாலுதரஞ்சேவித்தால் நமஸ்காரம், அஞ்சுதரம் சேவித்தால் அபிக்யம் பத்துதரஞ்சேவித்தால் சாஷ்டாங்கம அப்படியிருக்கப் பிரமதேவன் ஸ்ரீரங்கநாதனைப்பார்த்துப் பார்த்துச் சுவாமீ தேவரீருடைய திருப்பாதகமலங்களுக்கு இதோ நூறுதரஞ்சேவித்தேன் இதோ ஆயிரந்தரஞ் சேவித்தேன் இதோ பதினாயிரந்தரஞ் சேவித்தேன் இதோ கோடிதரஞ் சேவித்தேன் இதோ பத்துகோடிதரஞ் சேவித்தேன் நான் இப்படியே உம்முடைய திவ்வியரூபத்தை சதாகாலமும சேவிக்கவேண்டும் ஓய் லோகநாதா தேவரீர் எனக்குப்பிரசன்னமாகையால் என்விஷயத்தில் கிருபை செய்யவேண்டும ஓய் ஆதிதேவா தேவரீரெனக்குப் பிரசன்னமாய் எழுந்தருளிவந்து காட்சிகொடுத்தருளவேண்டும் ஸ்ரீமந்நாராயணா முகுந்தா பத்மநாபா ஹரிவாசுதேவா வைகுண்டவாசா செகந்நாதா கோவிந்தா ஸ்ரீரங்கநாதா ஸ்ரீரங்கேசா ஜெயம்ஜெயம் என்று ஸ்தவுத்தியம பண்ணிப்பின்னரும் அந்தப்பகவானைப்பார்த்து சுவாமீ தேவப்பிராமணர்கள் உமது திருமுகத்திற் பிறந்தவர்கள் க்ஷத்திரியர்கள் உம்முடைய கைத்தாமரையிற் பிறந்தவர்கள் வைசியர்கள் உம்முடைய தொடையிற் பிறந்தவர்கள் சூத்திரர்கள் உம்முடைய பாதத்திற் பிறந்தவர்கள் ஆகையால் அவரவர்களுடைய கிரம தர்மகர்மங்களும் நீரே அதுவுமல்லாமல் இந்திரனும் அக்கினியும் உம்முடைய திருமுகம சந்திரனுஞ் சூரியனும் உம்முடைய கண்கள் இந்தப்பிரசண்டவாய்வு உம்முடைய பூர்ணவாய்வு இந்தப்பூமி உம்முடைய திருவடி அந்தரலோகம் உம்முடைய நாபி சொர்க்கலோகம் உம்முடைய சிரசு எட்டுத் திக்குப்பாலகர்களும் உமது ஏவலாளர் பூதேவியும் ஸ்ரீதேவியும் உமது ஸ்திரீகள் மன்மதன் உமக்குத்திருமகன் இரவும்பகலும் உமது திருமேனி யொளிவாகும்.

இப்படி சர்வபூதங்களிலேயும் சர்வேந்திரியாமியாய் வியாபித்து சகலசீவராசிகளும பிறக்கும் நாலுவேதங்களும் உமக்கு அங்கமாயிருக்கும் அஃதெப்படியென்றால் சாங்கியயோகம் பரதசாஸ்திரம யாகசாஸ்திரம் வயித்தியசாஸ்திரம் சிற்பசாஸ்திரம் சோதிடசாஸ்திர முதலானவைகளெல்லாம் உம்முடைய வசனங்களாம் வேதமூர்த்தியாயிருக்கிற தேவரீரே புருஷமேநீரே புருஷோத்தமர் உம்முடைய நாசத்துக்கு

ணத்தில் ஆதிசேஷனும் தாமதகுணத்தில் ஏகாதசருத்திரர்களும் பிற ந்தார்கள் ஓ ஜெகத்காரணா ஸ்ரீ மந்நாராயணா உம்மைப்பார்க்கிலும் அதி கமான தெய்வமில்லை உமக்குச்சமானமான தெய்வமுமில்லை அக்கினி யும் வாயுவும் உம்முடைய ஆக்ஞைப்பிரகாரமே நடக்கின்றார்கள் சந்தி ரனும் சூரியனும் உம்முடைய கட்டளையின்படியே நடக்கின்றார்கள் மிருத்தியுதேவதையும் உமது கட்டளையின்படியே நடந்து வருகின்ற து-ஆகையால் உமக்கு இன்னமும் அனேக நமஸ்காரம்பண்ணுகிறேன் ஸ்ரீரங்கதாமா மோட்சத்திற்கதிகாரியும்நீரே மாயாபிரபஞ்ச சடசாரமா னதும் நீரே ஸ்தூலசூட்சும காரணமும்நீரே இந்தப்பிரபஞ்சமெல்லாம் உமதுலீலாவினோதமாகப் பிரகாசிக்கின்றது ஆதிபுருஷனும் அட்சியபு ருஷனும் நீரே வராரப்பட்டதும் முறையப்பட்டதும் நீரே அச்சுதனா யிருக்கிற உமக்கு அனேக நமஸ்காரம்.

கர்மபந்தங்களினாற் ஜென்மபந்தப்பட்டுச் சேதனமாய்ச் சஞ்சரிக் கின்ற சகலவுயிர்களும் நீரே அசேதனமாய்ச் சஞ்சரியாமலிருக்கிற தா மரங்கள் மங்களும நீரே அவைகளுக்குத்தகுந்த போக போக்கியங்க ளை யூட்டிவிக்கிறவரும் நீரே சீநிவாசா உமக்கு வந்தனம் சங்கருஷணா பிரத்தியுமனா அனிருத்திரா பரவாசுதேவா மதுசூதனா திரிவிக்கிரமா வாமனா - ஸ்ரீதராரிஷிகேசா தாமோதரா ஸ்ரீரங்கசாயி கேசவா - மாதவா கோவிந்தராஜா கோபாலா ஸ்ரீவேங்கடேசா வேணுநாதப்பிரியா உமக்கு நமஸ்காரம் காளிங்கமர்த்தனா கம்சஹரா மாயவா-மச்சாவதாரா-கூர்ம ரூபா-வராகரூபா- நரசிம்மமூர்த்தி-பரசிராமா - பலராமா-ஹயக்கிரீ வா- உமக்கு நமஸ்காரம் - புராணபுருஷா புஜங்கசயனா - பக்தவத்சலா பரந்தாமா நமோ - நமோவென்று ஆனந்தத்தில் ஸ்தவத்தியம் பண் ணிக்கொண்டு நிற்கின்ற பிரமதேவனை அந்தப்பகவான் கிருபாகடாட்ச த்தினால் மேலெடுத்துப்பார்த்து வாரும் பிள்ளாய் பிரமாவே நாம் நீசெய் த தபசுகளாலும் நீசெய்த ஸ்தவத்தியங்களினாலும் சந்தோஷமடை ந் தோம் நீமுன்னமே நாம் கட்டளையிட்டபடி சகலலோகங்களையுங் கிரம மாகச்சிருஷ்டி பண்ணினதற்கு மெச்சினோம்.

ஆகையால் இந்தப்பூமண்டலத்தில எவனாகிலும் நீ இப்போது நம் மை ஸ்தவத்தியம்பண்ணின திருநாமங்களைப் பரிசுத்தனாயிருந்து இடை விடாமல் பாராயணஞ்செய்வானாகில் நாம் அவனுக்குப் பிரசன்னமாகி அவன்கேட்டவரங்களெல்லாங் கொடுப்போம் - நீசெய்த தபசுக்கும் ஸ் தோத்திரங்களுக்கும் பிரியப்பட்டு நம்முடைய நிஜசொரூபத்தை உன் க்குத்தரிசனமாய் கொடுத்தருளினோம் அல்லாமலும் இனிமேல் உனக்கு வேண்டிய வரத்தையுங் கேட்பாயாகில் அதுவுந் தருகிறோமென்று பரி பூரண கடாட்சத்தினால் அமிர்தவருஷம் வருஷித்ததுபோல் திருவாய் மலர்ந்தருளினார் - கேட்டீரோ நாரதமுனிவரேயென்று பிரமதேவன் திரு வுளம்பற்றியருளினார்.

அதைக்கேட்டு நாரதரும் பரமசிவனைப் பார்த்து சுவாமீ காலகண்ட மூர்த்தி அந்தப்பிரமதேவன் ஸ்ரீரங்கநாதனை ஸ்தோத்திரம் பண்ணின திருநாமங்களைக்கேட்டு அடியேன் கிருதார்த்தனாயினேன் - இனியேனும் எந்தக்காலத்திலும் நானும் உபயகாவேரி சூழ்ந்திருக்கப்பட்ட திருவரங்கமென்னுந் திவ்யஸ்தலத்திற்குப்போய் காவேரிதீர்த்தத்திலும் சந்திர புட்கரணி தீர்த்தத்திலும் மகாபக்தி விநயத்துடனே ஸ்நானம்பண்ணி ஜெபதபானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு அப்பால் அகிலாண்ட கோடி பிரமாண்ட நாயகராயும் ஆதிமத்தியாந்தரகிதராயும் ஆபத்பாந்தவராயும் அநாதரட்சகராயும் ஆதிசேஷசயனராயும் ஆதிலக்ஷ்மீசமேதராயும் அநந்தபத்மநாபராயும் அகிலபுவனசமரட்சகராயும் கரிராஜவரதராயும் கௌசலைபுத்ரராயும் கனகாம்பரதாரியாயும கருணைகடாட்சராயும் விளங்கப்பட்ட ஸ்ரீரங்கநாயகனைச்சேவித்துப் பூசித்து சேவிக்கப் போகிறேனென்று பலவாறாகத் தோத்திரபண்ணினார்.

நான்காவது-அத்தியாய முற்றிற்று.

ஸ்ரீரங்கநாதாயநமஹா.





உ

ஸ்ரீரங்கநாதாயநமஹா.

# ஐந்தாவ-அத்தியாயம்.



துதிகவி.

விருத்தம.

அகமமறைதகொண்டொருமூன்றுலகினையு மொருகுடையிலரசுசெய்து
நிகழுமாவலிபாலோர்வாமனமாய்ச்சென்று நிரப்புந்றோர்போல (நச்
விகழுமொருமூவடிமண் கொண்டவனெஞ்சகமடக்கி யிமையோர்போற்
சகமதனிற்பொன்னரங்கந்தன்னிலறிதுயில்வளருந் தாளுபோற்றி.

அப்பால் நாரதபகவானெழுந்திருந்து சாம்பவமூர்த்திக்கு நமஸ்காரஞ்செய்து ஓய் ஸ்வாமீ காமதகன அந்தப்பிரமதேவனுக்குப் பெருமாள் சாதித்தருளிய வரப்பிரசாதங்களையும் பிற்பாடுநடந்த சகலவர்த்தமானங்களையுந் தெரியச்சொல்ல வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யப் பசுபதியின் திருவுளம்பற்றியருளுகின்றார்.

# ஸ்ரீ ரங்க மகத்துவம்.

கேட்டீரோ நாரதரே பெருமாள் அப்படித்திருவுளஞ்செய்தருளிய வசனாமிர்தங்களைக்கேட்டுப் பிரமதேவனும் சந்தோஷத்தை யடைந்து சுவாமி க்ருபாகடாட்ச கஜேந்திரவரதா - தேவரீர் அடியேனிமித்தம் இந்தத்திருவுருவத்துடன் பிரசன்னமாயெழுந்தருளிவந்து பிரத்தியட்ச தரிசனங்கொடுத்தருளியது உண்மையாகில் எப்போதும் இந்தத்திருவுருவத்துடன் இந்தத்திவ்விய விமானத்திலெழுந்தருளியிருந்தே தரிசனங்கொடுத்தருளவேண்டும் இந்தத்திவ்ய ஸ்தலத்திலேயே இடைவிடாமலிருந்து திரிகாலமும் பூசைமுதலிய சர்வோபசாரங்களுஞ் செய்யவேண்டும் இப்படிப்பட்ட மகத்துவமுள்ள திவ்யாலங்கார விமானதரிசனஞ்செய்த பக்தஜனங்களுக்கு நாளுக்குநாள் அஷ்டாயிசுவரியமும் ஆயுராரோக்கியமும் தெய்வபக்தியும் குருபக்தியும் விர்த்திக்கச்செய்து சரீராந்தத்தில் மரணவேதனையின்றி அனாயாசமரணமாய் உம்முடையதிருவடி நிழலில் வந்துசேவைசெய்யும்படி கடாட்சித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய அதுகேட்டுப்பெருமாள் திருவுளமகிழ்ந்து ஓய் பிரமாவே நாம் எப்போதும் இந்த விமானத்திலிருந்தே உனக்கும் மற்றுமுண்டான பக்தஜனங்களுக்குங் காட்சிகொடுக்கா நிகின்றோம்.

நமக்கு உன்னுடைய கைகளினலேயே தினமானம் அநுகாலமும் பூசை முதலான சகலோபசாரங்களும் பண்ணவேண்டும் இப்படி நூறுவருடகாலம் தப்பாமல் மகாபயபக்தி விசுவாசத்துடனே பூசைபண்ணுவாயாகில் ஸ்ரீவைகுந்தத்தில் நம்முடையபக்தஜனங்களாய்விளங்கப்பட்ட நித்தியாயிசுவரியர்களுடன் சுகித்திருப்பாய் அதற்குச்சந்தேகமில்லை அந்தவைகுந்தத்தின் பெருமை எப்படிப்பட்டதென்றால் பிரமாண்டங்களுக்கப்புறம் திசாயானமிருக்கும் அதற்கப்புறம் விரஜாநதியிருக்கும் அதற்கப்புறம் ஸ்ரீவைகுந்தமிருக்கும் அந்தவைகுந்தத்தில் நாம்பிரகிருத திவ்யமங்கள சரீரத்துடனே பிராட்டிசமேதராயிருந்து தரிசனங்கொடுப்போம் நாம் அங்கேயிருக்கப்பட்ட திவ்யரூபத்துடன் இங்கேவந்து உலகருப்பிரத்தியட்ச தரிசனங் கொடுத்தருளினோம் நாம்லீலாவிபூதியாய சேதனங்களாயிருக்கப்பட்ட மாயாப்பிரபஞ்சங்களையுண்டுபண்ணி அந்தப்பிரபஞ்ச சம்பந்தமான சகலஜீவராசிகளுக்குள் நாமே பிரவேசித்து சகலவித்தைகளையும் நடத்திவருகின்றோம் சகலபிரபஞ்சங்களையும் நாமேயுண்டுபண்ணுவோம் நாமேரட்சிப்போம் நாமே நாசமாக்குவோம் நம்மால் சகலபிரபஞ்சங்களையும் சகலஜீவராசிகளையும் ஆக்கவும் அழிக்கவுங்கூடும் இதுகளால் உண்டாகும் பாபபுண்ணியங்கள் நம்மைச்சேரமாட்டாது நாமகிருபையினாலே சகலஜீவராசிகளுடைய இருதயம் பரங்களில் எள்ளுக்குள் எண்ணெய்போல் வியாபித்து நின்று அவரவர்களுடைய வுபாசனத்தில் ஞானவிளக்கப் பிரகாசிக்கப்பண்ணி அஞ்ஞானவிருளைத் தூரத்திவிடுவோம்.

துவுமில்லாமல் நாம்சகல பிராணிகளிடத்திலும் பரிபூரணமா
யிருந்து அவரவர்கள் வினைக்குத் தகுதியாய் பாரபட்ச மில்லாமல்தநு
கரணபுவனபோகங் களைக்கொடுத்துத் தாயானவள் பிள்ளைகளைக்காப்பா
ற்றுகிறது போற் காப்பாற்றி வருகின்றோம் இப்படிப்பட்ட நம்மை
மாயா விசித்திர திரத்தினால் தேவர்கள் முதலான சர்வஜீவராசிகளும்
மோகத்தை யடைந்து கண்டறிய மாட்டார்கள் ஆகையால் நம்மைச்சகல
ஜீவப்பிராணிகளுங்கண்டு தரிசிக்கும்படி மூன்றிடத்தில் நம்முடைய நிஜ
சொரூபத்தைக் காண்பித்தருளினோம் இந்த இடங்களா எங்கேயென்
றால் திருப்பாற்கடலும் சூரியமண்டலமும் சொர்க்கபூமாம் அதனா
ல்தான் நமக்குத்திருத் தாமமென்னு மொருதிருநாம முண்டாயிற்று
மேலும் ராசததர்ம குணங்களினால் நம்மைக் கண்டறிய மாட்டார்க
ள் இப்படிகண்டு கொள்ளாமல் மாயாசங்கார வாழ்க்கையி லமுழுந்திக்
கிடந்த ஜீவர்களையெடுத்துக கரையேற்றும் பொருட்டு நாம்சம்பத்து
க்குக்கம்பம் ஆயிரம் அவதாரங்களையெடுப்போம் அப்படி எடிக்கின்ற கா
லத்தில் பக்தியினாலாகிலும் சிநேகிதத்தினாலாகிலும் பிராணபயத்தினா
லாகிலும் புத்திர சோகத்தினாலாகிலும் தாசானுதாசர்க ளிடத்திலிருக்கி
ன்ற பிரீதியினாலாகிலுமநம்மை நினைத்தபேர்களை யீடேற்றி ரட்சிப்போ
ம் நம்முடைய பக்தஜனங்களா யிருக்கிறவர்களா நமது கல்யாண குண
னுபவங்களைககண்டறிந்து - காம - குரோத - லோப-மோக- மத-மாச்
சரியவர்சசிதாகளாயிருந்து இடைவிடாமல் நம்முடையதிருநாமங்களை
ஸ்தவுத்ரியம் பண்ணிக் கொண்டாடுவார்கள்.

இன்னம்நாம்பலவிதமான லீலாவதாரங்களையெடுத்து சகல ஜீவ
ராசிகளையும் நாடியாற்செயவிப்போம் மேலும நாம்சர்வபூதங்களிட
த்திலும் வியாபகமாயிருந்து பக்தஜனங்களைரட்சிப்போம் நாம் நானா
ரூபமான சரீரங்களிலும் புகுந்து இசுகா சம்பந்தமாய் ஞானரூபமும்
அஞ்ஞான ரூபமுமெடுப்போம் அம்சாவதாரங்களாகவும்மனுஷாவதார
ங்களாகவும் மிருகாவதாரங்களாகவும் பிறப்போம் அதுவு மல்லாமல்
அர்ச்சாவதார மென்கிறவிக்கிரக சொரூபமாகவும் விளங்குவோம் மரங்
களிலும் பஞ்சலோகங்களிலும கல்லுகளிலும் மிருத்துக் களிலும்
பிரகாசிக்கிருப்போம் பரமாத்மாவாகிய நாமே சேதனாசேதனங்களா
ய் பூமியில்சஞ்சரிக்கப்பட்ட சராசரவஸ்துக்களாய் விளங்குவோம் ஆ
கையால் இப்படி இப்படி அர்ச்சாவதாரமாய்ப் பிரகாசிக்கப்பட்ட விக்
கிரகசொரூபங்களை எவனாவது கல்லென்றும் செம்பென்றும் மரமெ
ன்றும் பொன்னென்றும மண்ணென்றும் சித்திரப் படமென்றும் நிந்
தைசெய்து பரியாசம்பண்ணுவானாகில் அவனையும் அவன் வங்கிஷத்தா
ரையும் நரகத்திலமூழ்த்திப்போடுவோம் நம்மைப்பூசை பண்ணுகிறவர்களை
யும் நம்முடைய திருநாமங்களை ஸ்துதி பண்ணுகிறவர்களையும் நம்மை

ண்ணி அதனால் அவரும் அவர்வமிசத்திற்பிறந்த ராசாக்களும் பரம பாகவதர்களாகி மோட்சத்தைப்பெற்றார்களே அதுபோல நானும்த பசுபண்ணி, அந்தவிமானத்தை நம்முடைய தேசத்திற்செழுந்தருள ச்செய்யும்படி கருதினேனென்று மகாதாபசுதரியமாகச் சொன்னான.

அதுகேட்டு அந்த முனீஸ்வரர்களெல்லாரும் சோழராசனைப்பா ர்த்து ஓராசாவே நீர் எவ்வளவும் சந்தேகப்படவேண்டாம நீர் இந் தத் தவவேடத்தை நீக்கிவிட்டு உம்முடைய பட்டணத்துக்குப்போய் சுகமாய் ராச்சியபரிபாலனம்பண்ணும் அந்ததிவ்விய விமானம் மூன் னேழுசிறிதுநாளைக்குள் இந்தச்சந்திரபுஷ்கரணி தீர்த்தக்கரையில்வந் துசேரப்போகின்றது-அந்தவர்த்தமானம் எங்களுக்கு நன்றாய்த்தெ ரியும் எப்படியென்றால் இந்தச்சந்திரபுஷ்கரணி • தீர்த்தத்திற்கு இர ண்டுநாழிகை வழிக்கப்புறம் உம்முடைய பாட்டான்மார் அரசாட்சி பண்ணிக் கொண்டிருந்த ஒருபெரிய பட்டணமுண்டு-அது இப்போ துமண்மேடாய்ப்போச்சுது.

ஏனென்றால் சிவ பூசைபண்ணும்படி நந்தவனத்திலிருந்து பறி த்துக்கொண்டுபோகிற புஷ்பக்குடலையிலிருந்துஒருசெவ்வந்திப்புஷ் பத்தைப்பலவத்காரமாகப் பிடுங்கி அந்தப்பட்டணத்திற்கு அந்நாளை யில் ராசாவாயிருந்தவன் தரித்துக்கொண்டான் அந்தச்சேதி பரமே ஸ்வரருக்குத்தெரிந்து அந்தப்பட்டணமுழுதும் மண்மாரிபெய்யும படி செய்தருளினார் அதனாலே மண்மேடாகிவிட்டது அதற்குநேராக உத்தரபாரிசத்திலே காவேரிதீர்த்தத்திற்கு அக்கரையிலே புலஸ்தியமு னிவருடைய சீஷராயிருக்கப்பட்ட காலப்பிய மகாமுனிவர் சத்திய சுத்தியென்கிற புண்ணியாச்சிரமத்தில் ஏகாந்தமாய் தபசுபண்ணி க்கொண்டிருந்தார் நாங்களெல்லாரும் ஒருகாரணநிமித்தம் அந்த மு னீஸ்வரரைக்காணும்படி அவிடத்திற்குப்போயிருந்தோம்.

அப்போது அந்த ஆசிரமத்துக்கு வாய்வுமூலையில் நீலிவனமெ ன்னும் ஒருவனமுண்டு அந்தவனத்திலேயே வாசமாயிருந்து வருகி ன்ற முனிவர்களையெல்லாம் தூத்தியடித்துக் கொல்லுகின்ற மகாபா தகனாகிய வியாக்கிரமாசுரனென்னும் பெயரையுடையராட்சதனைச்சங் காரஞ்செய்து சகலமுனீஸ்வரர்களுடைய மனோபயத்தையும் நிவர்த் திசெய்யும்பொருட்டு ஸ்ரீமந்நாராயணமூர்த்தியானவர் அந்தநீலிவன த்திற்கு எழுந்தருளிவந்து பிரமாதிசகலதேவர்களும்செயஜெயமெ ன்று கொண்டாடும்படியாக அந்தக்குரூரபாதகனாகியராட்சதனை ஒரு நிமிஷத்திலே சங்கரித்தருளிவிட்டு அந்தவனத்திலிருந்து தபசுபண்ணுகி ன்ற முனீஸ்வரர்களுக்கெல்லாம் திருச்சேவைசாதித்தருளி அப்பால் பெருமாளானவர் காலப்பியமுனிவருடைய ஆசிரமத்துக்கு எழுந்த ருளிவந்து சேவைசாதித்தார்.

அதுகண்டு காலப்பியமுனிவரும் நாங்களும் எழுந்திருந்துமகா பக்திவிநயத்துடனே பெருமாளுக்கு நமஸ்காரம்பண்ணி அர்க்கிய பாத்திய ஆசமனமுதலான சகலஉபசாரங்களையும் க்ரமமாகச்செய்து

முடித்து அந்தப்பகவானுக்குமுன்னாங்களெல்லாரும் அஞ்சலியஸ்தர்களாய் நின்றுகொண்டுஸ்வாமீ பக்தவச்சல - பரமபுருஷா - ஹரிஹரி நமோநமோ நாராயணாவென்று ஸ்தவுத்தியம்பண்ணி தேவரீர் அடியேங்களெல்லாரும் பூசைபண்ணிக் கரையேறத்தக்கதாய் இந்த ஆசிரமத்தில் ஒருவிக்கிரகரூபமாய் சேவைசாதித்து நாள்தோறும் நாங்கள் செய்யப்பட்ட ஸ்தோத்திரபாராயணங்களையும் பூசைகளையும அங்கீகாரம்பண்ணி எங்களைக்காப்பாற்றி ரட்சித்தருள வேண்டுமென்று வெகுவாய்ப் பிரார்த்தனைசெய்தோம் பெருமாளும் நாங்களசெய்தபிரார்த்தனைக்குத் திருவுளமிரங்கி எங்களுக்குத் தேறுதல்சொல்லி ஓய் முனீஸ்வரர்களே நீங்களொன்றுக்கும் அஞ்சவேண்டாம்நாம் இன்னுஞ்சிறிதுநாளைக்குள் அயோத்தியாபுரி பட்டணத்தில் தசரதச் சக்கிரவர்த்திசெய்யப்பட்டயாகத்தில் அவருக்கு ஸ்ரீமந்தபுத்திரனாய் அவதாரஞ்செய்து மகாதுஷ்டனாகிய இராவணசம்மாரம்பண்ணி இலங்காபுரிபட்டணத்தை அவன்தம்பியாகிய விபீஷணாழ்வானுக்கேபட்டங்கட்டுவித்து பிற்பாடு இக்ஷுவாகுமகாராசனிடத்தில்முன்னமேகடாட்சித்தருளிய விமானத்தைப் பூசைபண்ணும்படி அவ்விபீஷணாழ்வானிடத்திற் கொடுத்தருளுவோம்.

அங்கவிபீஷணாழ்வான் கொண்டுவந்து காவேரிமத்தியில் சந்திரபுஷ்கரணி தீரத்தில் அனந்தபீடத்திலவைத்து சதாகாலமும திருவாராதனைக் கிரமப்படிப்பூசைபண்ணப்போகிறான் அப்போது நீங்களெல்லாரும் அந்தவிமானத்தில் விக்கிரகசொரூபமாய்ச் சேவைசாதித்தெழுந்தருளி யிருக்கப்பட்ட நம்மைச் சதாகாலமும் சேவைபண்ணி உங்களுக்கு மனோரம்மியமான சகலசித்தி முக்திகளை யடையப்போகிறீர்களென்று எங்களுக்குறுதி மொழியாய்த் திருவாக்களித்துவிட்டு இந்திராதி சகலதேவர்களும் ஸ்தவுத்தியம்பண்ணுமபடியாய் மகாவைபவத்துடனே பெருமாள ஸ்ரீவைகுந்தத்திற்குபபோய்விட்டார் - நாங்களெல்லாரும அவருக்குப்பிறகே நின்று வேதபாராயணங்கள் செய்துக்கொண்டு சூரியமண்டல பரியந்தம போய்த் திரும்பினோம் - அப்போது சூரியபகவான் எங்களைக்கண்டு ஆதரணை பண்ணி ஓய் முனிஸ்வரர்களே நீங்கள் பெருமாள் கட்டளையிட்டருளிய திருவாக்குக்குச் சந்தேகப்பட வேணடுவதில்லை - நாஙகள ஆதியில பிரமலோகத்திற்குப்போய் விமானத்தில் விக்கிரகசொரூபமாய் சர்வாடம்பரத்துடனே ஆதிசேஷசயனத்தில் திருக்கணவளர்ந்தருளுகின்ற பகவானைப்பார்த்து வெகுவாய்ப் பிரார்த்தித்தோம் அந்தப்பிராத்தனைக்குப் பகவான் திருவுளமகிழ்ந்து ஒருவசனங் கட்டளையிட்டருளினா.

அஃதென்னவென்றால் நாம்சிலநாளைக்குள் உன்னுடைய வமிசத்திற்பிறந்த இராசாக்களெலலாம பூசைபண்ணி இஷ்டசித்திகளையும்மோட்சத்தையும் பெறும்படி - அயோத்தியாபுரிபட்டணத்தில் இந்தவிமானத்துட னெழுந்தருளுவோம், அப்பால் சிறிதுநாளைக்குப

பின்பு காவேரிமத்தியில் சந்திரபுஷ்கரணி தீர்த்தத்தில் அனந்த பீடத்திலிருந்து விபீஷணாழ்வாலே பூசிக்கப்பெற்று பிறகு சோழராஜனாலும் பூலோகத்திலுள்ள மற்றுமுண்டான நம்முடைய பக்தசனங்களாலும பூசிக்கப்படுவோம் பிற்பாடு கலியுகத்திலும் நம்முடையமகத்துவந்தெரிந்து நம்மைப்பூசை பண்ணுகின்ற பக்தசனங்களையும் இரட்சித்து மோட்சத்தைக் கொடுத்தருளுவோம் என்றும் திருவாய்மலர்ந்தருளியிருக்கிறார் ஆதலால் நீங்களெல்லாரும் காவேரிதீர்த்தக்கரையைவிட்டு நீங்காமல் தபசுபண்ணிக்கொண் டிருங்களென்று சொன்னார் ஆதலால் நாங்களெல்லாரும் அந்த விமானத்தைத் தரிசிக்கும்படி அபேட்சைகொண்டு இவ்விடத்தில காத்துக்கொண்டு இரவும்பகலும் அதேசிந்தனையாக விருக்கிறோம் ஓ சோழராசாவே இப்போது அந்தத்திருவாக்குப்பிசகாமல் அயோத்தியாபுரியில் தசரதராமனைப் பெருமாள திருவவதாரம்பண்ணி யிருக்கிறார் இனிமேல் இராவணசம்மாரம் பண்ணி விபீஷணாழ்வானுக்குப் பட்டங்கட்டிவைத்து - பிற்பாடு அயோத்தியாபுரிக்குச் சீதாலட்சுமண பரதசத்துருக்கர் ஆஞ்சனேயசமேதராய் புஷ்பவிமானத்தின்மேரி லெழுந்தருளிவந்து பட்டாபிஷேகஞ் செய்துக்கொண்டு அசுவமேதயாகம் பண்ணுகின்றகாலத்தில அந்தவிமானத்தைப் பூசைபண்ணும்படி விபீஷணாழ்வாரிடத்தில் கொடுக்கனுப்பப்போகிறார் நாங்கள பொய்வார்த்தை வசனிக்கமாட்டோம்.

அந்தவிபீஷணாழ்வார் விமானத்தை இவ்விடத்திற் கொண்டுவந்தவுடன் உமக்குச்சேதிதெரிவிக்கின்றோம் நீர்இந்தவார்த்தையைச் சத்தியமாகநினைத்து மனோகயிரியமாய் உம்முடைய நிஷ்களாபுரி யென்னும் பட்டணமேபோய்ச்சேர்ந்து சுகமாய் ராச்யபரிபாலனம் பண்ணிக்கொண்டிருமென்று அந்தமுனிஸ்வரர்களெல்லாம் ஒருமுகமாய்ச்சொன்னார்கள் அந்தவார்த்தையைக்கேட்டு தர்மப் பிர்மாவாகியசோழராஜனும் மனமகிழ்ச்சியடைந்து அந்தமுனிசுவரர்களுக்கு மகாபக்தி வினயத்துடன் நமஸ்காரஞ்செய்து அவர்களிடத்தில விடைபெற்றுக்கொண்டு தன்னுடைய நிஸ்களாபுரிபட்டணமே போய்ச்சேர்ந்து ராஜநீதிவழுவாமல் அரசாட்சிசெய்துக் கொண்டிருந்தான் அப்பால சிறிதுநாளைக்குப்பிறகு ஸ்ரீராமபத்திரர் இராவணசம்மாரஞ்செய்து அயோத்தியாபுரிக்குவந்து பட்டாபிஷேகஞ் சூட்டிக்கொண்டு அசுவமேதயாகம் பண்ணும்படி பிரயத்தினஞ்செய்து சகலமானராசாக்களுக்கும் திருமுகங்கட்டளையிட்டருளினார் அப்போது ஐம்பத்தாறுதேசத்துராசாக்களும் வந்துசேர்ந்தார்கள்.

நிஷ்களாபுரியை யாளப்பட்ட தர்மப்பிர்மாவாகிய சோழராசனும்வந்திருந்தான் இவர்களை யெல்லாம் கூடவைத்துக் கொண்டு ஸ்ரீராமமூர்த்தியும் அசுவமேதயாகஞ்செய்து முடித்து சகலராசாக்களுக்குமெகுமதிபண்ணி அவரவர்கள் பட்டணத்திறகுப்போகும்படி விடைகொடுத்தனுப்புகிறதற்கு முன்னமே தர்மப்பிர்மாவாகிய சோழராஜன் ஸ்ரீராமமூர்த்திக்கு நமஸ்காரம்பண்ணி சுவாமி எனக்குப்பட்டணத்தில சிறிதுகாரியமிருக்கின்றது ஆதலால் நான் விரைவாய்ப்போ

கவேண்டுமென்று விடைபெற்றுக்கொண்டு விபீஷணாழ்வாருடனும் சிநேகமாகப்பேசி அவரிடத்திலும் செலவுபெற்றுக்கொண்டு தன்னுடைய பட்டணத்துக்குவந்து இனிமேல் அயோத்தியாபுரியி லெழுந்தருளியிருக்கும் திவ்யவிமானம் காவேரிமத்தியில் வந்து சேருவதற்குச் சந்தேகமில்லையென்று தனக்குத்தானே நிச்சயித்துக்கொண்டு சிற்பசாஸ்திர விதிப்படி பாஞ்சராத்திரக் கிரமந்தவறாமல் காவேரிக்கரையில் கோயில்கோபுரங்கள மண்டபங்கள் சத்திரங்கள் ரிஷியாசிரமங்கள் முதலானதுகளும் உண்டாக்கிவைத்து பூசைக்கு வேண்டியபூசாதிரவியங்களும் சேகரித்துவைத்துக்கொண்டு அநேக பிராமணகூட்டத்துடன் மனமகிழ்ச்சியாயிருந்து விமானம எப்போதுவருமெப்போதுவருமென்ற அபேக்ஷையுடன் வழிபார்த்துக் கொண்டிருந்தான்.

அப்படியிருக்க வசந்தகாலமானவுடன் சூரியன் மீனத்தில் பிரவேசமான பங்குனிமாசம் ரோகிணிநட்சத்திரம சப்தமி தசமி வாரங்கூடின சுபதினத்தில் ஸ்ரீராமமூர்த்தியானவர் தங்கள்குலதெய்வமாயிருக்கப்பட்டவிமானத்தைப் பூசைபண்ணி அந்தபூசைக்கு வேண்டிய வுபசாரங்களுடன் விபீஷணரிடத்திற்கொடுத்து அந்தவிமானமகத்துவத்தையும் சவிஸ்தாரமாகச்சொல்லி அப்பாவிபீஷணா நீ இந்த விமானத்தை எடுத்துக்கொண்டுபோய் பத்திரமாகவைத்துப் பூசைபண்ணி உன்னுடைய இலங்காபுரிபட்டணத்திலிருந்து சுகமாய்ராச்சியபரிபாலனம் பண்ணிக்கொண்டு சிரஞ்சீவிய க வாழக்கடவாயென்று ஆசீர்வதித்தருளினார், அதுகேட்டு விபீஷணரும் பாக்கியம்பாக்கியமென்று ஸ்ரீராமமூர்த்திக்கு நமஸ்காரஞ்செய்து அவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு விமானத்தையெடுத்துச் சிரசின்மேல் வைத்துக்கொண்டு ஹரிநமோநமோ வென்கிறசந்தத்துடன் தன்னுடைய நாலுமந்திரிகளுடனேயும் சோழதேசத்திற்குவந்துசேர்ந்து மத்தியானவேளையில் காவேரிமத்தியில் சந்திரபுட்கரணி தீர்த்தத்தல் ஆனந்தபீடத்தில் விமானத்தைக் கொண்டுவந்து வைத்தார்.

அதன்பிறகு விபீஷணரும் சந்திரபுஷ்கரணியில் ஸ்நானம்பண்ணி உச்சிகால செபதபவனுஷ்டான கர்மங்களை முடித்துக்கொண்டு விமானத்தி னிடத்திற்குவந்து உச்சிகாலபூசை செய்யும்படிதொடங்கினார் அதுதெரிந்து அவ்விடத்தில் காத்துக்கொண்டிருந்த முனிவரர்களும சோழராசனும்வந்து மகாபக்தி வினயத்துடனே விபீஷணருக்கு நமஸ்காரம்பண்ணி பிற்பாடு ஸ்ரீரங்கவிமானத்தைக் கண்டு அநேகமாயிரமாய் ஸ்தவுத்திரங்கள்பண்ணி அர்க்கியபாத்திய ஆசமனமுதலான சகலவுபசாரங்களுஞ் செய்துமுடித்து ஆனந்தபரவசராகி விபீஷணரைப்பார்த்து ஓய்லங்காதிபதியாகியவிபீஷணாழ்வாரே உம்முடைய கிருபாகடாட்சத்தினால் நாங்களெல்லாரும் இந்ததிவ்ய

விமானத்தைச் சேவைசெய்து பூசைபண்ணி கிருதார்த்தர்களாகினோம் எங்கள்பிதிர்க்களும நரகத்தைவிட்டு மோட்சத்தையடைந்தார்கள இந்தத்தர்மப்பிர்மாவாகிய சோழராசனும் இந்தத்தேசத்திலுள்ளராசாக்களும் உமமுடைய தர்மத்தினால் கிருதகிருத்தியராயினார்களென்று அந்தமுனீசுவரர்களெல்லாம் விபீஷணனைப் பலவாருகப் புகழ்ந்து கொண்டாடினார்கள் கேட்டீரோ நாரதரேயென்று பரமசிவன்றிருவுளம்பற்றியருளினார் அதுகேட்டு நாரதருஞ்சந்தோஷகரமாய் ஆச்சரியப்பட்டு மவுனமாய் ரங்காரங்காவென்று தியானம் பண்ணிக்கொண்டிருந்தார்.

எட்டாவது - அத்தியாயமுற்றும்.





௯

ஸ்ரீரங்கநாதாயநமஹா.

# ஒன்பதாம்-அத்தியாயம்.



துதிகவி.

விருத்தம்.

ஆவணியுரோகிணிநா ளமரபக்கத்தட்டமியி லரிவைவேற்கட்
டேவகிபாற்றோன்றி நந்தன்மனைவளர்ந்து மாதுலனாந்தியகஞ்சப்
பாவியுயிரறவீட்டிப்பார்த்தன்விடு மொருதனிதேர்ப்பாகனாகக்
காவிரிசூழரங்கத்திற் கண்வளருமணிவண்ணா கண்ணாபோற்றி.

பிற்பாடு- நாரதமுனீசுவரர் எழுந்திருந்து ஸ்ரீகைலாசவாசியாகிய சாம்பசிவமூர்த்திக்குத் தண்டனிட்டு ஓய் சுவாமி அப்பால் விபீஷணாழ்வார் அந்தவிமானத்தைக் காவேரிக்கரையில் வைத்து எதுவரையில்பூசைபண்ணினார் அவர் இலங்காபுரிபட்டணத்திற்கு எப்போது போய்ச்சேர்ந்தார் அந்த வர்த்தமானங்களையும் விபரமாகசசொல்லியருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய - பரமசிவன் திருவுளம்பற்றியருளுகின்றார் கேளுமையா நாரதமுனிவரே, அதற்குமேல் விபீஷணர் அந்தரிஷிகணங்களுடனே யந்தச்சந்திரபுட்கரணி தீர்த்தத்திலஸ்நானம்பண்ணித் தேவர்ப்பணம், ரிஷிதர்ப்பணம், பிதிர்த்தர்ப்பணங்கொண்டுகாவேரியிற்போய் கணுக்கால் சலத்தில் திருமஞ்சனங்கொண்டு வந்துவைத்து நந்தவனத்திற்குப்போய் - செங்கழுநீர், கருநெய்தல், வெண்டாமரை, செந்தாமரை, புன்னை - திருத்துழாய்-சண்பகம், அசோகு, பாதிரி, வகுளம், முல்லை, மல்லிகை, திருவாட்சி,

என்றுசொல்லப்பட்ட நானாவிதசுகந்த பரிமளபுஷ்பங்களைப்பறித்துக்கொண்டு சாஸ்திரயுக்தமாக இயமநியமமுதலான அஷ்டாங்கயோகக்கிரமப்படி ஸ்ரீரங்கநாயகரைப் பூசைபண்ணி தூபதீப நைவேதனமுதலானசோடச வுபசாரங்களும் செய்யத்தொடங்கின சமயத்தில.

தர்மப்பிர்மாவாகிய சோழராசனுடைய கைங்கரியமாய் வரப்பட்ட நைவேத்தியங்களையும் ஸ்ரீரங்கநாயகருக்கு பூசைபண்ணுவித்து சர்வோபசாரங்களுஞ்செய்து வேதசாஸ்திரபுராணங்களினால் ஸ்தோத்திரபாராயணம்பண்ணிப் பிரதட்சண நமஸ்காரங்களுஞ்செய்து முடித்து அவ்விடத்தில் வந்திருக்கப்பட்ட தர்மப்பிர்மாவாகிய சோழராசன்முதலான சகலராசாக்களையும் சகலமுனீசுவர்களையும் ஸ்ரீரங்கநாதருடையசேவைபண்ணும்படி செய்வித்து விபீஷணர் மங்கள ஆலாத்தியெடுத்தார் அந்தவேளையில தர்மப்பிர்மாவாகிய சோழராசன் விபீஷணரைப்பார்த்து ஐயாவிபீஷணாழ்வாரே தேவரீருக்கு நமஸ்காரம் நமஸ்காரமென்றுசொல்லி இரண்டுகைகளையுஞ் சிரசின்மேல் அஞ்சலியாகவைத்து கும்பிட்டுநின்றுசுவாமி தேவரீரே பரமபாகவதோத்தமர் நீரேபுண்ணியபுருஷர் உமமுடைய கடாட்சத்தினால் நாங்களெல்லாம் கிருதார்த்தர் களாயினேம தேவரீர் இவ்விடத்தில தானேசிறிதுகாலமிருந்து எங்களை இரட்சிக்கவேண்டுமென்று வெகுவாய்ப்பிரார்த்தித்தான்.

அதுகேட்டு விபீஷணர் தர்மப்பிர்மாவைப்பார்த்து ஓ சோழராசாவே நாம் உம்முடைய எண்ணத்தின்படியே நடப்பிக்கிறேம் ஆயினும் நாளைமுதல ஸ்ரீரங்கநாயகருக்குப் பிர்மோச்சவம் நடப்பிக்கவேண்டும் அந்த மகோச்சவமானது இட்சுவாகு மகாராசாவினுடையகாலமுதல் இதுவரையிலும தப்பாமல விபவமாய் நடந்தேறி வருகின்றது ஆகலால் அந்த உச்சவத்தைச்செய்யாமல் நிறுத்தப்போகாது, ஆனபடியினால் அதைக்கிரமமாய் நடத்திவிட்டு நாமசீக்கிரத்தில் இலங்காபுரி பட்டணத்திற்குப்போய் வரவேண்டுமென்று சொன்னார் அந்த வார்த்தையைக் கேட்டு சோழராஜனும் மகாசந்தோஷகரமாய் விபீஷணரைப்பார்த்து சுவாமீ தேவரீர் கருத்தின்படியே ஸ்ரீரங்கநாயகருடைய பிர்மோச்சவத்தை நடப்பித்து எங்களை யெல்லாங் கிருதார்த்தர்களாகச்செய்யுமையாவென்றுசொன்னான் அதற்குவிபீஷணரும அப்படியேநல்லதென்று சம்மதித்துக்கொண்டார் - அதற்குமேல தர்மப்பிர்மாவாகிய சோழராசன் பிர்மதேவனிடத்தில சிழர்களாயிருந்து பாஞ்சராத்திர சாஸ்திரங்களைக்கிரமமாகக் கற்றறிந்தவர்கள் அஞ்சுபேரை யழைப்பித்து அவர்கள அனுமதிப்படி காப்புகட்டி வஸ்துசாந்தி பண்ணுவித்துப்பிறபாடு துஜாரோகணஞ் செய்வித்து தினந்தினம மண்டபத்தில் சேவைசாதிக்கும்படி ஸ்ரீரங்கநாயகரை எழுந்தருளப்பண்ணி அவ்விடத்தில அர்க்கியபாத்திய ஆசனமுதலான சர்வோபசாரங்களும நடப்பித்து- பொங்கல்- சருக்கரைப்பொங்கல்-அக்காரவடிசில- ததியோதனம்- புளியவனா- எள்ளவனா- மிளகவனா- கடுகவனா - திருவிசாதம் - என்றுசொல்லப்பட்ட முப்பத்திரண்டுவகையோதனமெலாம.

தோசை - வடை - அப்பம் - எள்ளுருண்டை - அதிரசம் - மனோகரம், சுகியம் - தேன்குழல் - கோதுமைரொட்டி - அனையடிப்பம் முதலான கச்சாயவர்க்கங்களும் - பலாப்பழம் - மாம்பழம் - வாழைப்பழம் - செவ்வாழைப்பழம் - கொய்யாப்பழம் முதலான பழவகைகளும் தேங்காய்ச்செவ்விளநீர் - கரும்பு முதலானதுகளும் நைவேத்தியம் பண்ணிவைத்து - துப்பநெய் - புத்துருக்குநெய் - கற்கண்டு - சீனி - சருக்கரை - முதலானதுகளுஞ் சொரிந்து கமகமவென்று பரிமளிக்கும்படி திருப்பாவாடையுஞ் சுருளமுதுஞ்செய்து இன்னம் இப்படிப் பலவிதமான நைவேத்தியங்களும் அமிசை பண்ணுவித்து அப்பால் சாத்துபடி அலங்காரம் பண்ணி வச்சிராங்கி - ரத்தினாங்கி - தரிப்பித்து நவரத்தினக் கிரீடஞ்சூட்டி முத்தாபரணம் - ரத்தினாபரணம் - மாணிக்கபதக்கம் முத்துமாலை - ரத்தினமாலை - பவளமாலைகளும் - அலங்காரஞ்செய்து பஞ்சாயுதங்களுடனே அனேக ஆயுதவரிசைகளும் தரித்து இந்திரவர்ணப்பட்டு அதிககாந்தியான சந்திரகாந்தியுடையால பீதாம்பர முதலான திவ்யவஸ்திராலங்காரமுஞ் செய்துவித்தார்.

அப்பால் மெத்தைதகுழலை திருப்பல்லாக்கு முதலான சகல உபசாரங்களும் தப்பாமல் நடக்கும்படி உண்டுபண்ணி குடை மணிகள் திருவிளக்குகள் பூரணகலசங்கள் தீபாலத்திகள் தங்கப்படிகள் சங்குக்குடங்கள் தங்கக் கிண்ணங்கள் முதலான தட்டுமுட்டுகளும் வெய்வித்து - அன்னவாகனம் - சிம்மவாகனம் - கருடவாகனம் - நாகடிவிகனம் - குதிரைவாகனம் - ஆனைவாகனம் - அனுமந்தவாகனம் - இந்திரவிமானம் - திருத்தேர் முதலானதுகளும் உண்டுபண்ணி இவட்டிகள் பகல்வர்த்திகள் சித்திரபாத்தைகள் சூத்திரப் பிரதமைகள் விசித்திரங்களாகச் செய்வித்து தினந்தோறும் ஸ்ரீரங்கநாயகனை உச்சவக்ரமப் பிரகாரம் அந்தந்த வாகனங்களின் எழுந்தருளப்பண்ணி தேவதுந்துபி நாகசுரம் வீணை புல்லாங்குழல் குடமுழா பேரிகை திருச்சின்னம் முதலான சகலமேள வாத்தியங்களுடன் திசைகளெல்லாம் அதிரும்படி சுரம் தாளமென்று முழங்கத் தக்கதாக அரம்பை ஊர்வசி திலோத்தமை மேனகையென்று சொல்லப்பட்ட தேவஸ்திரீகளுக்கு உச்சமானமான ஸ்திரீசனங்கள் நாட்டியம் பண்ணிக்கொண்டுவர வேதவிதிகளும் பிரபந்தங்களும் இன்னம் அனேக தாசகூட்டங்களும் புடைசூழ்ந்து வேதபாராயணங்கள் செய்துகொண்டுவர மகாவைபவத்துடனே அனேகம் பிராமணர்களுக்கும் அதிதிகளுக்கும் அன்னதானம் பூதானம் கோதானம் வஸ்திரதானம் சொர்ணதான முதலான சகலதானதருமங்களும் நடப்பித்து பிராமண க்ஷத்திரிய - வைசிய - சூத்திரர்களென்னும் நாலுவகைச் சாதிகளுக்கும் பெருமாளுக்கு விநியோகமான பிரசாதங்களை அபரிமிதமாகக்கொடுத்து.

அப்பால் சந்திரபுஷ்கரணி தீர்த்தக்கரையில் புன்னை விருட்சத் தடியில தர்மப்பிரம்மாவாகிய சோழராசன் மனமகிழ்ச்சியாய்க்கட்டுவித்தமண்டபத்தில் ஒன்பதுநாளும் இவ்வகைப்பட்டசம்பிரமத்துடனே பெருமாளை எழுந்தருளச்செய்து பக்தசனங்களுக்கெல்லாம் சேவைசாதிக்கும்படி செய்வித்து அப்பால் பத்தாம்நாளாகிய பவர்

ண்மிதிதியில் ஸ்ரீரங்கநாயகருக்குமங்களஸ்நானம்பண்ணுவித்தார்-அந்தச்சமையத்தில் ஸ்ரீரங்கநாயகரும் விபீஷணரும் அவ்விடத்திலேஉச்சவம்முடிந்தபின்னும் பதினைந்துநாளமட்டு மகாசந்தோஷகரமாயிருந்து பிற்பாடுசோழராசனிடத்திலும் முனீஸ்வரர்களிடத்திலும் வேதப்பிராமணர்களிடத்திலும் இலங்கைக்குப்போகவேண்டுமென்று செலவுபெற்றுக்கொண்டு ஸ்ரீரங்கவிமானத்துக்குப் பிரதட்சண நமஸ்காரம்பண்ணி தன்னுடைய கைகளால விமானத்தையெடுத்தார் எடுக்கக்கூடாமலபோச்சுது அதுகண்டு விபீஷணர் நடுநடுங்கி மகாதுக்காக்கிராந்தராய் வெகுகிலேசத்துடனே ஸ்ரீரங்கநாயகருடையஉபயபாதாரவிந்தங்களையும் தன்னுடைய கண்களிலொற்றிக்கொண்டு விசனப்பட்டமுகமாத்திரத்தில் அந்தக்கண்ணீரானது பகவானுடைய திருவடிக்கமலங்களில்விழுந்தது அதுதெரிந்து ஸ்ரீரங்கநாயகர் விபீஷணரைப்பார்த்து வாருமப்பா விபீஷணா எழுந்திரு எழுந்திரு நீ ஒன்றுக்கும்பயப்படாதே உன்விசனத்தைவிட்டுவிடு காவேரிதீர்த்தமும் சந்திரபுட்கரணியும் கூடியிருக்கிறபடியால் இதுமகாபுண்ணியஸ்தலம் அல்லாமலும்சோழராசனும மகாபுண்ணியபுருஷன் மேலும் இந்தமுனீஸ்வரர்களும் வேதப்பிராமணர்களும் மற்றுமுள்ளதாசகூட்டங்களும் மகாஉத்தமபுருஷர்கள ஆகையால் இவர்களையும் இந்தஸ்தானத்தையும்விட்டுவர நமக்குச்சம்மதியில்லை ஆனபடியினால் நீநம்முடைய சொல்லுக்கு மாறுத்தரஞ்சொல்லாமல் மகாசந்தோஷமாய்ப்பிரயாணப்பட்டு உன்னுடைய பட்டணமாகிய இலங்காபுரிக்குப்போய்ச்சேர்ந்து பரமபாகவதனாய் மனுமுறைமைவழுவாமல இராச்சியபரிபாலனம பண்ணிக்கொண்டிரு இதுவுமல்லாமல இந்தக் காவேரிக்கு ஒருவரங்கொடுத்திருக்கிறோம்.

அதேதென்னவென்றால், பூர்வத்திலொருகாலத்தில் இந்தநதிகளெல்லாம் ஒன்றாகக்கூடி விந்தபர்வதத்தில வாசம்பண்ணிக்கொண்டு பந்துவிளையாடுகிறதும் அம்மானைபாடியும தும்பிபறக்கிறதும புட்பங்களபறித்தும் ஒருவருக்கொருவர் புண்ணியகதைகளைச்சொல்லிக்கொண்டு அதுஅதுகள இஷ்டலாபத்துடனே விநோதவுல்லாசமாய்விளையாடிக்கொண்டிருக்கறவேளையிலே விசுவாவசுவென்கிற ஒருகந்தருவன் அந்தரமார்க்கமாய் உத்தரதிசையிலிருந்து தட்சணதிசையைநோக்கி அனந்தபத்மநாபசுவாமியைச் சேவிக்கும்படிப் பிரயத்தனப்பட்டுப்போகும்போது வழியில் இந்தநதிகள விளையாடிக்கொண்டிருக்கிறதைப்பார்த்து இரண்டுகைகளையும் உயரவெடுத்து நமஸ்காரம் பண்ணிவிட்டுப்போனான அதுகண்டு இந்தநதிகளெல்லாம ஓரிடத்திற்கூடி நாம் இத்தனைபேரிருக்கிறோமே அந்தக்கந்தருவன் நமக்குள யாவனைநோக்கிநமஸ்காரம்பண்ணினானென்று ஒருவருக்கொருவர்கேட்க அப்போது என்னைக்கும்பிட்டானென்றும் உன்னைக்கும்பிட்டானென்றும்ஒன்றுக்கொன்று போராடிக்கொண்டிருந்ததுகள.

அந்தக்கந்தருவனோவென்றால், தட்சணதிசைக்குப்போய்ச்சமுத்திரஸ்நானம்பண்ணி அனந்தசயனத்திற்குவந்து மகாவைபவத்துடனே திருக்கண்வளர்ந்தருளுகின்ற ஸ்ரீ அனந்தபத்மநாபருடைய ஸ்ரீ

திரையை எழுப்பும்படி பூபாளராகத்தினால் ஹரிநாம கீர்த்தனங்கள் பாடித்திருக்கண் விழித்தருளின பின்பு அந்தச்சுவாமியைச் சேவித்துக்கொண்டு புரட்டாசிமாதமுதல் உத்தராயணகாலம் வருகிறமட்டும் அந்தஸ்தலத்திலேயே வாசமாயிருந்து பிற்பாடு சுவாமியைச்சேவித்து விடைபெற்றுக்கொண்டு உத்தரதிசையைநோக்கி அந்தமார்க்கமாய்ப்புறப்பட்டு வருகிறபோது விந்தியபர்வதத்தில் இந்தநதிகளெல்லாம் முன்போலக்கூடியிருந்து போராடியிருப்பதைக்கண்டு அவன் முன்போலவே நமஸ்காரம்பண்ணினான் அப்படி நமஸ்காரம்பண்ணினமாத்திரத்தில் அந்தநதிகளெல்லாம ஒன்றாகக்கூடி எங்களில் நீயாரைப்பார்த்து நமஸ்காரம்பண்ணினாயென்றுகேட்க உங்களுக்குள் எந்தநதியானது மகத்துவமும் மேன்மையும்பொருந்தியிருக்கிறதோ அதைப்பார்த்து நமஸ்காரம்பண்ணினேனென்று சொல்லிப்போய்விட்டான்.

அந்தவசனத்தைக்கேட்டு கங்கையானது நானேசிரேஷ்டமென்றுசொல்லியது அந்தச்சொல்லுக்குச் சரிதானென்றுசம்மதித்து எல்லாநதிகளும் சும்மாயிருந்தார்கள் அதில் காவேரிமாத்திரம் சம்மதிக்காமல் கோபங்கொண்டு கங்கையைப்பார்த்து நீ சிரேஷ்டமென்பதும் நான்சிரேஷ்டமென்பதும் சத்தியலோகத்திற்குப்போய் பிரமதேவனைக்கேட்டுத் தெரிந்துகொள்வோமென்று - கங்காநதியை யழைத்துக்கொண்டு சத்தியலோகத்திற்குப்போய் பிரமதேவனைக்கண்டு நமஸ்காரம்பண்ணி ஓய்சத்தியலோகவாசகா சதுர்முகப்பிரமாவே நதிகளுக்குள் நான்சிரேஷ்டமோ இந்தக்கங்காநதி சிரேஷ்டமோவென்று கேட்டது அதைக்கேட்டு பிரமதேவன் புன்சிரிப்பாகச் சிரித்து கங்கையானது ஸ்ரீவிஷ்ணுபாதத்திற் பிறந்தபடியால் சிரேஷ்டமென்று சொல்லப்படும் இப்படி சொல்லுவதில் உனக்குத் தாழ்ச்சி யென்னவென்று பிரமதேவன் ஆதரனையாகச்சொன்னான் அந்த வார்த்தையைக்கேட்டவளவில் காவேரிநதியும் லச்சையடைந்து இமோர்ப் பர்வதத்திற்கு வடபாரிசத்திலவந்துசேர்ந்து பிரமதேவனைநோக்கி மகாவுக்கிரமான தபசுபண்ணிக்கொண்டிருந்தது.

அப்போது அந்தக் காவேரிநதியினுடைய தபசுக்குமனமிரங்கி பிரமதேவனும் பிரத்தியட்ச தரிசனங்கொடுத்து உனக்கென்னவரம் வேண்டுமென்று கேட்டார் காவேரி நதியும் பிரமதேவனுக்குப் பிரதட்சண நமஸ்காரம்பண்ணி சுவாமி நான கங்காநதியிலும் சிரேஷ்டமாய் விளங்கும்படி கட்டளையிடவேண்டுமென்று கேட்டது அதற்குப்பிரமதேவன் காவேரிநதியைப் பார்த்து நீநம்மைநோக்கி மகத்தாகிய தபசுபண்ணினபடியால் இன்றுமுதல கங்காநதிக்குச்சமானமாய் உன்னைச்சகலமான செனங்களும்புகழ்ந்து கொண்டாடக்கடவர்களென்று வரங்கொடுத்துவிட்டு அன்ன வாகனத்தின்மேல் தன்னுடைய சத்தியலோகமே போய்ச்சேர்ந்தார் காவேரிநதியானது அந்த வரத்திற்குச் சம்மதிக்காமல் சோழதேசத்திற்குவந்து சேர்ந்து சாரக்ஷேத்திரமென்கிற திருச்சேறையிலிருந்து நம்மை விக்கிரகரூபமாகப் பாவ

லை பண்ணி பூசித்துத் தபசு பண்ணிக்கொண்டிருந்தது அந்த தபசுக்கு நாம் சந்தோஷத்தை யடைந்து பிரத்தியட்ச தரிசனங்கொடுத்து உனக்குவேண்டிய வரத்தைக்கேளென்று சொன்னோம் அதுகேட்டு காவேரிநதியும் நமக்குநமஸ்காரம்பண்ணி சுவாமீ லோகநாயகா நான் இவ்வளவுகாலம் தபசுபண்ணியும் உம்முடைய பாதத்திற் பிறந்தகங்காநதிக்குச் சமானமானேனேயல்லாமல் சிரேஷ்டமாகாமற் போனேன் ஆதலால் இனியாகிலும் என்னைச் சர்வத்திராளும கங்காநதியைப் பார்க்கிலும் காவேரிநதியே சிரேஷ்டமென்று சதாகாலமும்புகழ்ந்து கொண்டாடும்படி செய்விக்கவேண்டும்.

அதுவுமல்லாமல் கங்காநதியானது என்னைவந்துவணங்கும்படி செய்ய வேண்டுமென்று கேட்டது அதற்கு நாம் அங்கிகரியாமல் கங்காநதியானது நம்முடையபாதத்தில் பிறந்தபடியினாலெ அதுவேசிரேஷ்டமென்பது நிச்சயமாயினும் நீவெகுகாலமாய் நம்மைபூசித்துத்தபசுபண்ணினபடியால் கங்காநதியிலும் உன்னைச்சிரேஷ்டமாகச் செய்விக்கிறோம் அஃதெப்படியென்றும் ஒருநாளை நம்முடையபாதத்திற்பிறந்தகங்காநதியைச் சிரேஷ்டமென்று பூலோகத்திலுண்டான சகலமானபேர்களுங் கொண்டாடுகிறார்களே அப்படியிருக்க நாம் எப்போதும் உன்னிடத்தில்தானே வாசமாயிருக்கிறபடியால நீயேசிரேஷ்டமென்று சர்வத்திரசாதாரணமாகச் சொல்லுவதற்குச்சம்சயமில்லை உன்னுடையமகத்துவத்தை யொருவராலும் வர்ணிக்கமுடியாது நீ சுகமாயிருவென்று வரப்பிரசாதங் கொடுத்திருக்கிறபடியால் நாமினி யிவ்விடத்தில் தானே வாசமாயிருக்கப் போகிறோம் ஆதலால் நாம்காவேரி நதிக்குக்கொடுத்திருக்கிற வரத்துக்குபின்னம் வரவொட்டாமல்நீசெய்ய வேண்டியதென்று திருவாய் மலர்ந்தருளி, ஓய்விபீஷணா நாம் இலங்காபுரி பட்டணத்திற் கெழுந்தருள மாட்டோம்.

நாம் இவ்விடத்தில்தானே சதாகாலமும் வாசமாயிருந்து உன்னுடைய இலங்காபுரி பட்டணத்தைப் பார்த்தபடியேயிருப்போமென்றுசொல்ல அதுகேட்டு விபீஷணரும் பயபக்தி விநயத்துடனே சுவாமி ஸ்ரீரங்கநாயகா தேவரீருடைய திருவுளம்படியிருந்தால தாசன்என்செய்யப்போகிறேன் மகாசந்தோஷமாச்சுது நான்தேவரீருடையபாதார விந்தங்களையே இடைவிடாமற் பூசித்துக்கொண்டிருக்கிறேன் நான்இலங்காபுரிக்குப போகிறதில்லை எனக்குராச்சியபரிபாலனமும்வேண்டியதில்லை உம்முடையபாதாரவிந்தங்களேசரணாகதியென்றுசரணமடைந்தேன் என்னைத்தள்ளிவிடாமல் காப்பாற்றி இரட்சித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தான் அப்படிசொன்ன வார்த்தையை ஸ்ரீரங்கநாயகர்கேட்டுப்புன்சிரிப்பாகச்சிரித்து அப்பா விபிஷணா நீ ஸ்ரீராமமூர்த்தியால் பட்டாபிஷேகஞ் செய்வித்தராச்சி

யத்தைப் பரிபாலனஞ்செய்யாமல் விட்டுவிட்டு நீ இவ்விடத்தில்தா னே எப்படியிருக்கலாம் நீ அப்படிசெயாமல சுகமாய் உன்னுடைய பட்டணமே போய்ச்சேர்ந்து ராச்சியபரிபாலனம் பண்ணிக்கொண்டிருநாம் இந்தவிமானத்தில விக்கிரகரூபமாயிருந்து சகலமானபக்தஜனங்களுக்கு இஷ்டசித்திகளையும் மோட்சத்தையும் பிரசாதித்துக்கொண்டிருக்கிறோம.

நாம் இவ்விடத்திலிருக்கிறமட்டும் உனக்கும் உன்னுடைய இலங்காபுரிபட்டணத்துக்கும் ஒருதாழ்ச்சியுமில்லை சூரியசந்திரர்களுள்ள மட்டும் ஒருபயமுமில்லாமல் நிர்ப்பயமாய் சிரஞ்சீவியாகவிருந்து ராச்சியபரிபாலனமபண்ணி அதற்குமேல் பிரமகற்பாந்தத்தில்பிரமதேவனோடுகூடப் பரமபதத்திற்குவந்து நம்மைச்சேவித்து அவ்விடத்திலிருக்கப்பட்ட பரமபாகவதர்களாகிய நித்தியா ஐசுவரியர்களுடன் சிறிதுகாலமிருந்து பிறபாடுபிரமசிருட்டியில் திருமபவும் உன்னுடைய இலங்காபுரி பட்டணத்திற்குவந்து சுகமாய் அரசாட்சிசெய்பக்கடவாயென்று உறுதியாகச்சொல்லியருளினர். அதுகேட்டு விபீஷணர் மறுபடியும் பகவானைப்பார்த்து சுவாமி ஸ்ரீரங்கசாமா- ஸ்ரீராமபத்திரசுவாமி கொடுத்தருளிய விமானமே எனக்குசித்தியாமற்போன போது இலங்காபுரிராச்சியமும் சகலசம்பத்துகளுமிருந்து எனக்கு என்னபலனைக்கொடுக்கப் போகிறது எனக்கு அதுகளொன்றும் வேண்டியதில்லை உம்முடைய பாதமே கட்டளையிட்டருளவேண்டுமென்று நமஸ்காரம் பண்ணினன்.

அதுகேட்டுப் பெருமாளும் விபீஷணனைப்பார்த்து ஐயா விபீஷணா பூலோகத்திலுள்ள யோகீஸ்வரர்களும் முனீஸ்வரர்களும் இனையும் மற்றுமுண்டான பக்தசனங்களும் நம்மை நோக்கி அனேகதவசுகள் தானதருமங்கள் எக்கியங்கள் பண்ணி அந்தப்புண்ணிய கர்மங்களினுல் நம்முடைய கடாட்சம் பெற்று மோட்சத்தைப்பெறுவார்கள் ஆதலால்நீயும் நம்முடையவாக்குக் கெதிரசொல்லாமலபோய் உன்னுடைய பட்டணத்தைப் பரிபாலனம்பண்ணிக்கொண்டுமுற்கூறிய சற்கருமங்களைச் சதாகாலமும் நடத்திக் கொண்டிருந்தால உனக்குமோட்ச சம்பத்தைப் பிரசாதித்தருளுவோம் நீயும உன்னுடையபந்துசனங்களும் இவ்விடத்திற்கு அடிக்கடி வரவேண்டாம் பூலோகத்திலுள்ள புண்ணியபாவங்களில் விருப்பு- வெறுப்பில்லாமல் நிஷ்காமியதவம்பண்ணி நம்முடையபாதாரவிந்தங்களை சரணாகதியென்றுஎவன்சரணமடைகிறானோ அவனேமோட்சவதிகாரி அவனேநமக்குப்பிரியமானவனென்று அந்தரங்கமாய்த்திருவுளம்பற்றியருளினர்.

அதைக்கேட்டமாத்திரத்தில் விபீஷணரும் புளகாங்கிதத்தையுடையவராய் ஸ்ரீரங்கநாயகருக்குப் பிரதட்சணநமஸ்காரம் பண்ணி ஆயிரந் திருநாமங்களாலும் அருச்சனைபண்ணி அந்தப் பகவானிடத்தில் விடைபெறறுக்கொண்டு இலங்காபுரிபட்டணமே போய்ச்சேர்ந்து இராச நீதிவழுவாமல் ராச்சியபரிபாலனஞ் செய்துக் கொண்டிருந்தார் கேட்டீரோ நாரதமுனிவரே அப்பால் தர்ப்பப் பிரியாவர்கிய

சோழராசன் மனமகிழ்ச்சியடைந்து அனேகம் மண்டபங்கள், கோபுரங்கள் - சத்திரங்கள் - ரிஷியாசிரமங்கள் - கோயில்கள் - மதில்கள் - கட்டுவித்து அனேகந்திருக்குளங்களைவெட்டுவித்து அனேகம்புஷ்பவனங்கள் உண்டாக்கிவைத்து வேதப்பிராமணர்களால் நித்தியம் ஐந்துகாலபூசையும் பாஞ்சராத்திரக்கிரமந்தவறாமல் நடக்கும்படி செய்வித்து பிரமோற்சவமும் நித்தியோற்சவமுந் தப்பாமல் நடந்தேறிவரும்படி செய்வித்தானென்று பரமசிவன் திருவுளம் பற்றியருளினார் - இந்தமகத்துவங்களையெல்லாம் நாரதர்கேட்டு ஆச்சரியமாய் ஒன்றுஞ்சொல்லாமல் சற்றுநேரம் சும்மாவிருந்தார்.

ஒன்பதாவது - அத்தியாயமுற்றிற்று.





உ

ஸ்ரீரங்கநாதாயநமஹா.

# பத்தாம் - அத்தியாயம்.



துதிகவி.

விருத்தம்.

கவண்வாம்பரியுருவாய்வனி யிடையவதரித்துக்கருதுமன்பர்
பவமகற்றும்படியனபிறுளங்கொண்டு முனிவர்பல்லாண்டுகூறத்
தவமுயலுமவிட்டணுக்கிரங்கியொருவிமானமேய்சர்ப்பமீது
கவையறுசீராகத்திறபள்ளிகொள்ளும் ஸ்ரீரங்கநாதாபோற்றி

பிறபாடு நாரதபகவானெழுந்திருந்து ஸ்ரீ கைலாசபதியாகிய பரமசிவனுக்கு வலசாரி இடசாரியாகவந்து பிரதட்சண நமஸ்காரங்களபண்ணி ஸ்தோத்திரஞ்செய்து சங்கரா சர்வசிவதயாபரா தேவரீருடையகிருபாகடாட்சத்தினாலே பூலோகத்திற்கு ஸ்ரீரங்கவிமானம்வந்தவரலாறும் அதைப்பூசைபண்ணினவர்களும் ஒருதரம் அந்தஸ்தலமகத்துவத்தையும் அதிலுண்டான தீர்த்தமகத்துவங்களையும் கிரமமாகத் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யதிருவுளம்பற்றியருளுகின்றார்

கேளுமையா நாரதமுனிவரே ஸ்ரீரங்கவிமானத்தைச்சூழ்ந்த இரண்டுயோசனைதூரமட்டும் ஸ்ரீரங்கக்ஷேத்திரமெனறே சொல்லப்படும் அதிற்குடியாய் வாசமாயிருக்கிற பேர்களுக்கு ஒருக்காலும் நரக

யிலே ஸ்ரீ ரங்கத்துக்குப்போக வேண்டுமென்று வாக்கினால் சொன்னாலும் மனதினால் நினைத்தாலும் மோட்சத்தைப் பெறுவார்கள்- அப்படியிருக்குமானால் ஸ்ரீ ரங்கத்திலேயே சதாகாலமும் வாசம்பண்ணுகிறவனுடைய பெருமையை ஒருவராலும்விடச் சொல்லி முடியாது.

## முதலாவது-சந்திரபுட்கரணி தீர்த்தமகத்துவம்.

கேளுமையா நாரதரே அவ்விடத்தில் உபயகாவேரியல்லாமல் நவதீர்த்தங்களுண்டு அதுகளில் முதலாவது சந்திரபுட்கரணி தீர்த்தத்தில் எவனாகிலும் ஏகமனதாயிருந்து ஒருதரம் ஸ்நானம்பண்ணி நித்தியகர்மங்களை முடித்துக்கொண்டு தியானத்தைச் செபிப்பானாகில் அவனும் அவன் வமிசத்திலுள்ள பிதிர்தேவதைகளும் பாவவிமோசனர்களாய் புண்ணியலோகத்தைப் பெறுவார்கள்.

அதெப்படியென்றால், சந்திரனவன் தர்மகர்ப்பருடைய சாபத்தினால் தன்னுடைய பதினாறுகலைகளும் நீங்கிப்போய் மிகுந்ததுக் சாகக்ராந்தனாய் அந்த ஸ்ரீரங்கத்துக்கு வந்து சந்திரபுட்கரணி தீர்த்தக் கரையில் ஒரு புன்னை விருட்சத்தை வைத்துப் பயிராக்கி அதின் நிழலிலிருந்து நெடுங்காலந் தபசுபண்ணி பிறகு ஸ்ரீ ரங்கநாதருடைய கிருபா கடாட்சத்தினால் பழையபடியே தன்னுடைய பூரணகலைகளையடைந்து தன்னுடைய ஸ்தானத்துக்குப் போய்ச்சேர்ந்தார் அந்தப் புன்னைவிருட்சத்தைத் தெரிசித்தவர்களுக்கும் பரிசித்தவர்களுக்கும் மகாலட்சுமி கடாட்சமுண்டாகும் அந்தவிருட்சத்தைக் கண்டவுடனே சேவிக்கவேண்டும் அதன் நிழலிலிருந்து தானதருமங்கள் பண்ணவேண்டும் அந்தப்புன்னை மரத்தடியிலுட்கார்ந்து செபம்பண்ணினால் ஒன்றுகோடியாகப்பலிக்கும் எப்போதும் அந்தத் தீர்த்தக்கரையில் வேதவியாசர் வாசமாயிருப்பார்.

அந்தத்தீர்த்தத்திற்கு ரிஷி வேதவியாசர் அதற்குத் தேவதை வாசுதேவன் - புட்கரன் - புட்கராராஜன் - காலநேமி - குமுதன் - என்று சொல்லப்பட்ட இவர்கள் நான்குபேரும் காவலாகவிருப்பார்கள் இவர்கள் நால்வரும் ஸ்ரீரங்கநாயகருக்குத் தூதுவர்களாம் ஆதலால் சந்திரபுட்கரணி தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணவேண்டியவர்கள் அந்தத்தீர்த்தத்துக்குக் காரணதெய்வமாகிய வாசுதேவனை நினைத்துப் புட்பங்களைக் கையிலெடுத்துக்கொண்டு அந்தத்தீர்த்தத்துக்குப் பிரதட்சணநமஸ்காரங்கள் பண்ணி அந்தத்தியானங்களைச் சொல்லவேண்டும் அந்தத்தியானங்களெப்படியென்றால் சகலலோகங்களுக்கும் சகலஜீவராசிகளுக்கும் ஆதாரமாயிருக்கப்பட்ட கர்த்தாவே நான் ஸ்நானம் பண்ணும்படி அனுக்கிரகஞ்செய்யவேண்டும் என்னைப் பாசபந்தங்களினின்று நீக்கி மோட்சத்திற் சேர்க்கவேண்டுமென்று சொல்லி ஏகமனதாயிருந்து அதில் ஸ்நானம்பண்ணும்போது அஷ்டாட்சரமந்திரத்தைச் செபிக்கவேண்டும் அதற்குமேல கரையேறினவுடன் வாசுதேவருக்குத்தீர்த்தத்துக் கர்க்கியங்கொடுக்கவேண்டும் பிற்பாடு வேதவியாசருக்கும் சந்திரனுக்

கும்மற்றுமுண்டான தூ[illegible]ட்சகர்களுக்கும் அர்க்கியங்கொடுத்து அதற்குமேல் பிரமதேவனுக்கும் சூரியனுக்கும் இட்சுவாகுமகாராஜனுக்கும் உமக்கும் தர்ப்பணஞ்செய்வண்ணி தனக்குச்சக்தியுண்டானமட்டும் பிராமணர்களுக்கும் அதிதிகளுக்கும் தானதர்மங்கள் பண்ணினால் அவனுக்குப்பரமபதங்கிடைக்குமென்பதற்குச் சந்தேகமில்லை அந்ததீர்த்தக்கரையிலிருந்து ஹரிநாமஸ்மரணைபண்ணினால் அவன் தேவபோகத்தையனுபவிப்பான் அவன்செய்யும் புண்ணியங்கள் ஒன்றுகோடியாகும் ஆதலால் அந்ததீர்த்தத்தில் முழுகுகின்றவர்கள் விசேஷமாகத் தானதருமங்களையே செய்யவேண்டும்.

## இரண்டாவது-வில்வதீர்த்தமகத்துவம்.

கேளுமையா நாரதமுனிவரே அப்பாலங்கதீர்த்தத்துக்குக் கிழ்த்திசையில் ஏழுபிரகாரத்துக்கு வெளிப்புறத்தில் வில்வதீர்த்தமென்றொருதீர்த்தமுண்டு அதுசுக்கிரபகவான் தபசுபண்ணின ஸ்தானமெப்படியென்றால மகாபலிச்சக்கரவர்த்தியானவன் யாகம்பண்ணினசமயத்தில் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியானவர் வாமனாவதாரமாகப்போய் மூன்றடிமண்கேட்டார் அவருக்கு மூன்றடிமண் கொடுக்கும்படி சம்மதித்து மகாபலியானவன் வாமனமூர்த்தியாகிய பெருமாள்கையில் தாரைவார்க்கும்போது சுக்கிரனும் அந்தக்கமண்டல துவாரத்திற் புகுந்திருந்து கமண்டலசலம் பெருமாள்கையில் விழவொட்டாமல் செய்தான் அதற்குமேல தர்ப்பையினால துவாரத்தைக்குத்தி தாரைவார்த்தான் அதனால் சுக்கிரனுக்குக் கண்தெரியாமல குருடனாகிப்போனான் மனமூர்த்திககுதானம பண்ணுகிறகாலத்தில் குறுக்கேநின்று தடுத்தபடியினால் நமக்கு இந்தகதியாச்சுதென்று துக்கப்பட்டு இந்தத்தோஷநிவாரணமாகும்பொருட்டு வில்வதீர்த்தக்கரையில் ஒரு வில்வமரத்தை வைத்துப்பயிராக்கி அதின்கீழேயிருந்து வெகுகாலஞ்சுக்கிரபகவான தபசுபண்ணினார் அந்தத்தீர்த்தத்துக்கு ரிஷிசுக்கிரபகவான் முகுந்தனும் கணநாதரும் அதற்குக்காவலாளிகள் ஸ்ரீநிவாசராகவ அச்சுதர் அதற்குத்தேவதை அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணுகிறவர்களுக்குச்சகலதோஷபரிகாரமாம அவ்விடத்திற்காசித்தானம்பண்ணினால் விசேஷபலனுண்டாகும் அதைப்பார்க்கிலும் இரணியதானம்பண்ணினால் அதிகபலனுண்டு, அல்லாமல் அதில்ஸ்நானம்பண்ணினவன் ஸ்ரீவிஷ்ணுமூர்த்தியையும் பரமபாகவதர்களையும் நிந்தனைசெய்தவனானாலும் அவன்செய்த அபசாரங்களெல்லாம் நிவாரணமாகிக்கிருதார்த்தனான அந்தத்தீர்த்தக்கரையிற் செய்த தானதருமங்கள் ஒன்றுகோடியாய்வளரும் அந்தத்தீர்த்த மகத்துவத்தினால் பிரமஹத்திதோஷமும்நீங்கும்.

## மூன்றாவது-சட்புத்தீர்த்தமகத்துவம்.

கேளுமையா நாரதரே, அப்பால இந்திரதீர்த்தத்துக்கு அக்கினிதிசையில் சட்புதீர்த்தமென்றொரு தீர்த்தமுண்டு அதின்தீர்த்தக்கரையில் [illegible] வாசமாயிருப்பார், அது எப்படியென்றால்

ல்பிரமதேவனுடைய ஆக்ஞையில் உலகத்திலிருக்கப்பட்ட சகலஜீவராசிகளுக்கும்மயக்கமுண்டாகும்படி பாஷாண்டமதமும் அந்தமதசித்தாந்தத்துக்குத்தகுந்த பலவிதசாஸ்திரங்களுமுண்டுபண்ணி சகலஜனங்களையும் மயங்கச்செய்வித்த தோஷந்தீரவேண்டுமென்று நினைத்து அந்தத்தீர்த்தக்கரையில் ஒரு நாவல்மரத்தைவைத்துப் பயிராக்கி அந்தமரத்தின்கீழ் வெகுகாலமிருந்து தபசுபண்ணினான், அந்தத்தீர்த்தத்திற்கு ரிஷிஆக்கிரேயத்தர் அதற்குக்காவலாளிகள் நந்தன்கணாதன் என்னுமிரண்டுபேர் அதற்குத்தேவதை ஈசானியன் அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணிபிராமணர்களுக்கு அன்னதானங்கொடுத்தால அவனுக்குச்சகலபாவங்களுநீங்கும் அந்தத்தீர்த்தத்துக்கு அன்னதானமேவிசேஷமாகும் அவனால்ஸ்ரீரங்கநாயகர் சந்தோஷத்தையடைந்து தம்முடைய பரம பாகவதர்களுக்குச்செய்த அபசாரங்களையெல்லாமபொறுத்து இரக்ஷித்தருளுவார்.

## நான்காவது-அசுவதீர்த்தமகத்துவம்.

கேளுமையா நாரதரே, அப்பால் சந்திரபுஷ்கரணிக்குநேர்தெற்காகவும், காவேரிக்குவடக்காகவும், அசுவதீர்த்தமெனவொருதீர்த்தமுண்டு அந்ததீர்த்தத்தினிடத்தில் சொர்க்கலோகாதிபதியாகிய தேவேந்திரன் அகலிகையைப்பிடித்ததோஷம் நிவாரணமாகும்படி ஒருஅரசமரத்தைவைத்துப் பயிர்செய்து அந்தமரத்தின்கீழிருந்து வெகுகாலந்தபசுபண்ணி அந்ததோஷத்தைப் பரிகரித்துக்கொண்டான் அந்தத்தீர்த்தத்திற்கு ரிஷிகௌதமர் அதற்குக்காவலாளி அனந்தர் அதற்குதேவதைஇந்திரன், அந்ததீர்த்தத்தில ஸ்நானம்பண்ணிகன்னிகாதானம்வஸ்திரதானம பண்ணினால சகலதோஷங்களும் பரிகாரமாகும் மேலும்பதிவிரதாசிரோன்மணிகளா யிருக்கப்பட்ட ஸ்திரீகளையிச்சித்ததோஷமும நீங்குமபடி பெருமாளகடாட்சிப்பார்.

## ஐந்தாவது-புன்னாகதீர்த்தமகத்துவம்.

கேளுமையா நாரதரே அப்பால்சந்திர புஷ்கரணிக்குநேர் மேற்குத்திசையில காவேரிநதியில் புன்னாகதீர்த்தமெனவொருதீர்த்தமுண்டு அந்தத்தீர்த்தக்கரையில் அக்கினிதேவனானவன் ஆறுநட்சத்திரங்களைக்கூடிய தோஷப்பரிகாரமாகும்படி ஒருபுன்னைவிருட்சத்தைவைத்துப்பயிர்செய்து அந்தமரத்தின்கீழ்வெகுநாள தபசுபண்ணிக்கொண்டிருந்தது அதனால் அந்ததோஷத்தை நீக்கிக்கொண்டான் அந்தத்தீர்த்தத்துக்குரிஷி-சுபுத்திரர், அந்தத்தீர்த்த இரட்சகர்விதுதியாதரர், அதறகுத்தேவதை அக்கினிதேவன் அந்ததீர்த்தத்தில் ஸ்ரீ பதியாகிய நாராயணனைநினைத்து ஸ்நானஞ்செய்து பசுவு நெய்தானம்பண்ணினால் அவன்செய்திருக்கப்பட்ட பாவஙகளெல்லாம் பறந்துபோகும மேலும் பரதாரத்தை யிச்சித்தபாவமும் நீங்கும்படிபெருமாள் கடாட்சித்தருளுவார்.

## ஆறாவது-வகுளதீர்த்தமகத்துவம்.

கேளுமையா நாரதரே அப்பால்சந்திரபுட்கரணிக்குவாயவ்யமூலையில் வகுளதீர்த்த மென்றொரு தீர்த்தமுண்டு அங்கே தேவேந்திரனானவன் விருத்திராசுரனைக்கொன்ற பழிநீங்கும்படி அந்தத் தீர்த்தக்கரையில் ஒருவகுளமரத்தைவைத்துப்பயிராக்கி அந்தமரத்தின் கீழிருந்து சிறிதுநாள் தபசுபண்ணி அந்தபாவத்தைபோக்கிக் கொண்டான் அந்தத்திர்த்தத்துக்கு ரிஷி-பிரஜாபதி-அந்தத்தீர்த்தரட்சகர் சடகோபாழ்வார் அதற்குத்தேவதை இந்திரன் அந்தத்திர்த்தத்தில ஸ்ரீரங்கநாதனை நினைத்து ஸ்நானம்பண்ணி தம்மால் இசைந்தமட்டும் தானதருமங்களைப்பண்ணினால் அவர்களுக்குச்சகலபாவங்களும்போம் அல்லாமலும் கோவதை-ஸ்திரீவதை- பிராணவதைபண்ணின தோஷங்களும்நீங்கும்படி பெருமாள் கடாட்சஞ் செய்தருளுவார்.

## ஏழாவது - பலாசுதீர்த்தமகத்துவம்.

கேளுமையா நாரதரே- அப்பால் சந்திரபுட்கரணிக்கு நிருதிமூலையில் காவேரிநதிக்குத்தென்மேற்கில 'பலாசுதீர்த்தமென்றொரு தீர்த்தமுண்டு அந்தத்திர்த்தக்கரையில ஒருதிவ்யவிமானபூவரசவிருட்சமுண்டாயிருந்தது அந்தமரத்தடியில் தபசுபண்ணி குமாரக்கடவுள் சத்தியாகிய வேலாயுதத்தைப்பெற்றார் அந்தத்திர்த்தத்துக்கு-ரிஷி அகஸ்தியர் அந்தத்திர்த்தரட்சகர்பலராமர் அதற்குத்தேவதைகுமாரக்கடவுள் அந்தத்திர்த்தத்தில் எவனாகிலும்சித்தசுத்தியுடையவனாகிஸ்நானஞ்செய்து பிராமணர்களுக்குக் கோதானங்கொடுத்தால் அவனுக்குமோட்சமுண்டாகும் அதுவுமல்லாமல்காமக்குரோதபார்களாயிருக்கப்பட்ட துர்ச்சக்க சாலகாசத்தினுண்டான சகலதோஷங்களும்பரிகாரமாகும்படி பெருமாள்பிரசாதித்தருளுவார்.

## எட்டாவது-கடம்பதீர்த்தமகத்துவம்.

கேளுமையா நாரதரே அப்பால் சந்திர புட்கரணிக்கு கேர்வடதிசையில கொள்ளிடக்கரையில் கடம்பதிர்த்தமென்றொரு திர்த்தமுண்டு அந்தத்திர்த்தக்கரையில் கடம்பவிருட்சங்கள விஸ்தாரமாயிருக்கும அந்தவிருட்சத்தின்கீழிருந்து ஜனகமகாராஜன் வெகுநாளாயாகமபண்ணி இஷ்டசித்திகளையும மோட்சத்தையும்பெற்றான்- அந்த திர்த்தத்துக்கு ரிஷி ஜனகர் அந்தத்திர்த்தரட்சகர் கருடாழ்வார் அதற்குத்தேவதை சதுர்முகப்பிர்மா அவ்விடத்தில் புருஷோத்தமனென்கிறபெருமாள பிரமதேவனை நாபியில் வைத்துக்கொண்டு பள்ளிகொண்டிருக்கிறார் ஆதலால அந்தத்திர்த்தத்தில ஸ்நானம்பண்ணி பிராமணர்களுக்கு அறுசுவை பதார்த்தங்களுடனே அன்னதானம்பண்ணுவித்தால்சகலபாவங்களும் நீங்கும்மேலும் ஒருவரிடத்தில தானமவாங்கின தோஷமும நீங்கும்படிபெருமாள கிருபைசெய்வார்.

## ஒன்பதாவது - அம்பாதீர்த்தமகத்துவம்.

கேளுமையா நாரதரே அப்பால் சந்திர புஷ்கரணிக்குநேர் ஈசானிய மூலையில் கொள்ளிடத்திற்கு வடபாரிசத்தில் அம்பாதீர்த்தமென்றொரு தீர்த்தமுண்டு அந்தத்தீர்த்தக்கரையிலொருமாமரத்தைவைத்துப்பயிர்செய்து அந்தமரத்தின்கீழ்நெடுநாளிருந்து சூரியன்தபசுபண்ணினான் - அந்தத்தீர்த்தத்திற்கு ரிஷிவசிஷ்டர் அதற்குத்தேவதை சூரியன் அந்ததீர்த்தரட்சகர் விசுவக்சேனர் அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணி பிராமணர்களுக்குப் பூதானம்பண்ணினால் அவர்களுக்குச் சகலபாவமும்நீங்கிவிடும் அல்லாமலும் அவர்கள் தாய்தகப்பன் செய்தபாவங்களும்பரிகாரமாகும்படி பெருமாள்கடாட்சஞ்செய்வார்

ஆகையால் ஸ்ரீரங்கஸ்தலத்துக்குப்போய் ஸ்ரீரங்கவிமானத்தைச்சேவித்தவன் மேற்சொல்லிய நவதீர்த்தங்களிலும்ஸ்நானம்பண்ணி அந்தத் தீர்த்தவாசிகளாகிய ரிஷிகளுக்கும் தேவதைகளுக்கும் பிரீதியாக முதற்சொல்லிய தானதருமங்களைச் செய்துபிறகு காவேரிநதிக்கரையில்வந்து தேவதர்ப்பணம்-ரிஷிதர்ப்பணம் - பிதிர்தர்ப்பணமுதலானதுகளும் கிரமமாகச்செய்து காவேரிசலத்தை இரண்டுகைகளினாலுமுகந்தெடுத்துநான் அறிந்துசெய்த பாவங்களையும்-அறியாமற்செய்த பாவங்களையும்பரிகரித்த அமிர்தகரமான இந்தசலம் என்சரீரத்திற்ஸ்பரிசனமானவுடன் சகலசம்பத்துகளுமுண்டாக வேண்டுமென்று சங்கற்பம்பண்ணி அந்தச்சலத்தைச்சிரசின்மேற்புரோட்சித்துக்கொண்டு பிற்பாடு அந்தக்காவேரியில் ஸ்நானம் பண்ணவேண்டும்.

அதுவுமல்லாமல் எட்டுத்திக்குகளில் எட்டுத்தீர்த்தங்களும் எட்டுவிருட்சங்களுமாயிருக்கின்றது இந்தச்சந்திரபுஷ்கரணிதீர்த்தமாத்திரமத்தியிலிருக்கின்றது அதனிடத்தில் ஸ்ரீரங்கநாயகர்வியானருடராய் ஆதிசேஷசயனத்தில் பள்ளிகொண்டிருக்கிறார் எவனொருவனந்தத்தீர்த்தத்தில் முழுகினாலும் அதைக்கையினாலள்ளிச்சிரசின்மேல்ஸ்ரீரங்காவென்று புரோட்சித்துக்கொண்டாலும் அந்தத் தீர்த்தத்தைப்பானம்பண்ணினாலும் அதைத்தரிசித்தாலும் கைகளால்பரிசித்தாலும் அதன்பெயரைவாக்கினால் வசனித்தாலும் செவிகளால் கேள்விப்பட்டாலும் அவனுக்குச்சகல பாவங்களும் நீங்கிப்போகும்.

அல்லாமலும் வேறொரு நாடுநகரங்களுக்குப்போயிருந்து அவ்விடத்தில் இருக்கப்பட்ட ஏரிகுளங்கள் முழுகுறகாலத்தும் ஒருவன் இந்தச் சந்திரபுஷ்கரணியின் பேரைச்சொல்லி முழுகுவானாகில் அவனுக்குமேற்சொல்லியதீர்த்தங்களில் முழுக்கின பலனே சித்தியாகும்மேலும் முற்கூறிய நவதீர்த்தங்களிலும் ஒருபகல்முப்பது நாழிகைக்குள் ஸ்நானம்பண்ணி பிரதட்சண நமஸ்காரங்களைச்செய்து அப்பால் ஸ்ரீரங்கநாயகனையுஞ் சேவைபண்ணுவானாகில் அவனும் [illegible]

வமிசத்தில் இருபத்தொரு தலைமுறைகளில்வரும் பிரம்மாக்களும் அவனுக்குப்பின் முப்பது தலைமுறைகளில்வரும் புத்திரர் மித்திரர்களும் ஸ்ரீரங்கநாயகருடைய கிருபாகடாட்ச வீட்சணத்தினால்-பரமபதவாசிகளாவார்கள் மேலும் அந்த ஸ்தலத்தில் ஏகாதசியன்றைக்கு உபவாசமாயிருந்து நவதீர்த்தங்களிலு முழுகிய பிரதட்சண நமஸ்காரங்கள் பண்ணி ஸ்ரீரங்கவிமானத்தையும் பரமபாகவதர்களையுஞ் சேவித்து அன்றிராத்திரிமுழுதும் கண்ணுறங்காமலிருந்து மறுநாள் உதயகாலத்திலும் முற்சொல்லிய தீர்த்தங்களில முழுகி ஸ்ரீரங்கநாயகருடைய சேவைசெய்துக்கொண்டு பிற்பாடு அந்த ஸ்தலத்திலேயே பாரணைபண்ணினால் அவனும் அவன்வமிசத்திலுள்ளவர்களும்வைகுந்தத்தில் நித்தியாயிசுவரியர்களாக வாழ்ந்திருப்பார்கள் இதற்குச்சந்தேகமில்லை-மேலும் அந்தவொன்பது தீர்த்தங்களிலும் ஸ்நானம்பண்ணி பிண்டப் பிரதானஞ்செய்து பிதிர்தர்ப்பணஞ் செய்வானாகில் அவனுடையபெருமை இவ்வளவென்று ஒருவராலும் அளவிட்டுச்சொல்லுமுடியாது அதுசிரார்த்தம் பண்ணினதற்குச் சரியாகும்.

ஒருவன் அந்தஸ்தலத்தி லிருக்கப்பட்ட பசுக்களுக்கு ஒருவாய் புல்பிடுங்கிக் கொடுப்பானாகில் அவனுடையபிதிர்த்தேவதைகள் கயா சிரார்த்தம்பண்ணின சந்தோஷத்தை யடைவார்களென்று பரமசிவன்றிருவுளம்பற்றியருளினார் அதுகேட்டு நாரதபகவானும் எழுந்திருந்துசுவாமி பரமேஸ்வராதேவரீருடைய கிருபாகடாட்சத்தினால் ஸ்ரீரங்கமகத்துவமாகிய புண்யசரித்திரத்தை ஆதியோடந்தமாக ஐயந்திரிபறக்கேட்டுக் கிருதகிருத்தியனாகினேன் இனியின்னுமொருவரிடத்திற்போய் கேட்டறியவேண்டிய சந்தேகமில்லையென்று ஸ்ரீகயிலாசபதியாகிய பரமசிவனுக்குப் பலமுறை நமஸ்காரங்கள் பண்ணி அவருக்கு அர்க்கியபாத்திய ஆசமனமுதலான சகலோபசாரங்களுஞ் செய்து அவரிடத்தில விடைபெற்றுக்கொண்டு தம்முடைய ஆசிரமத்திற் போய்ச்சேர்ந்தார்.

இப்படிப்பட்ட மகத்துவமாகிய சரித்திரத்தை எவனாகிலும் எழுதுவானாகில் அவனுக்குப் பெருமாள் சகலசம்பத்தும் அஷ்டஐசுவரியமும் கொடுத்தருளுவார்.

அல்லாமலும் அமாவாசை-பவர்ணமி- முதலான புண்ணியதிதிகளில ஸ்நானசந்தியானங்கள் முடித்துக்கொண்டு பரிசுத்தராயிருந்து அந்தச்சரித்திரத்தைப் படித்தவர்களுக்கும் கேட்டவர்களுக்கும பெருமாள் அஷ்டஐசுவரியமும் ஆயுரோக்கியமும் கொடுத்து ரட்சித்தருளுவார் அவர்களுக்கு யாகாதி கிருத்தியங்கள் பண்ணினபலனுங்கிடைக்கும.

மேலும் இத்தச்சரித்திரத்தை விஷ்ணுஸ்தலங்களிலாவது சிவஸ்தலங்களிலாவது புண்ணியதீர்த்தங்களிலாவது படிப்பார்களாகில் அவர்களுக்குச் சகலபாக்கியங்களு முண்டாகும்.

இந்தச் சரித்திரத்தைப் பக்தியில்லாதவனிடத்திலும் தெய்வநிந்தைபண்ணுகிறவ னிடத்திலும் சோம்பலாய்க் கேட்கிற வனிடத்திலும் ஆசாரஹீனனிடத்திலும் படிக்கப்போகாது ஒருவேளை பொருள் சம்பாதிக்கநிமித்தம் படித்தபோதிலும அவனுக்குப்பாவமேயல்லது புண்ணிய மில்லை.

இந்தச்சரித்திரத்தைக் காமக்குரோதமில்லாத சாந்தரிகளிடத்திலும் சிரத்தை பத்தியுள்ளவர்க ளிடத்திலும் கேட்கவேண்டியது-அப்படிப் பட்டவர்களுக்கே சொல்லவும் வேண்டியது இந்தப்பிரகாரம் படிப்பவர்களும கேட்பவர்களும் சித்தசுத்தி யுடையவாகளாயிருப்பார்களாகில் அவர்களுக்குச் சகலசஞ்சித வினைகளும் விடுபட்டுப் போய மோட்சசமபத்துண்டாகும்.

அல்லாமலும் இந்தச்சரித்திரத்தைப் பிராமணர்கள் கேட்டால்ஏக்கிஞ்செயத பலனைப்பெறுவார்கள் க்ஷத்திரியர்கள் கேட்டால் இராஜ்ஜீகத்தைப்பெறுவார்கள் வைசியர்கள்கேட்டால திரவியசம்பத்தைப்பெறுவார்கள சூத்திரர்கள் கேட்டால் தேவபக்தியைப் பெறுவார்கள் சண்டைக்குப் போகிறவன் கேட்டால் செயத்தைப் பொருந்துவன் ...ப்பவதியானவள் கேட்டால் நல்லபுத்திரனைப் பெறுவாள கன்னிகையானவள் கேட்டால நல்லபுத்திரனைப் பெறுவாள் இந்தச்சரித்திரத்தை வைத்திருக்கிறவன் சித்தசுத்தியும் பக்தியும் புத்தியும் வித்தையும் சாந்தமும் ஆசாரமும் இலலாதவனு யிருந்தாலும இந்தமகிமையினுல் அவன்வீடு அளகாபுரியைப் போலவும் சுவர்க்கலோகம் போலவும் பிரகாசிக்கும் அவன் மறு பிறவியில் புண்ணியசென்மத்தைப்பெற்று ஸ்ரீரங்க நாயகருடைய கிருபா கடாட்சத்தினுல் சகல ஐசுவரியமும் பெற்றுப் பரமபாகவதனுக ஸ்ரீவைகுந்தத்தைப் பெறுவானென்றறிக.



## ஸ்ரீரங்கமகத்துவம.

முற்றுப்பெற்றது.

